கழக வெளியீடு: ருளஅ.

# சென்னைத் தமிழ்ப் புலவர்கள்

## இரண்டாம் புத்தகம்



மணி. திருநாவுக்கரசு முதலியாரவர்களின்
இளவல்
மணி. திருஞானசம்பந்தமுதலியாரவர்கள்
எழுதியது.



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தமிழ்ப்புலவர் பெருமக்களின் வரலாறுகள் தமிழர் உளங்களில் தமிழ்வீறு கிளர்ந்தெழச் செய்வனவாகும்.

தமிழரின் நாகரிகச் செவ்வியின் சான்றாகக் கன்னித் தன்மையுடன் விளங்கும் தமிழ்த்தாயினைக் காலந்தோறும் புலவர் பெருமக்கள் அணிசெய்து வளம்படுத்திப் போற்றி வந்திருக்கின்றனர்.

அவருள், சென்னை நகரின்கண் வாழ்ந்து பணியாற்றிய மூவர் வரலாறுகள் 'சென்னைத் தமிழ்ப் புலவர்கள் முதற் புத்தகமாக'த் திரு. மணி. திருஞானசம்பந்த முதலியார வர்களால் எழுதப்பெற்று வெளிவந்தது. மற்றும் மூவர் வரலாறுகள் அவர்களாலேயே எழுதப்பெற்று இரண்டாம் புத்தகமாக இப்போது வெளிவருகின்றது.

தமிழ்நலத்திற்கு ஆக்கந்தரும் இந்நூலினைத் தமிழ் மாணவ இளைஞர் அனைவரும் கற்றுப் பயனடையும் வண்ணம் செய்யுமாறு தமிழ்ப் பெருமக்களை வேண்டுகின்றோம்.

தமிழரனைவரும் தமிழ் அறிஞராக விளங்கவேண்டும் என்ற நோக்கத்திற்கு இந்நூல் பெரிதுந் துணைசெய்யும் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# பொருளடக்கம்

# தி. த. கனகசுந்தரம் பிள்ளை



## க. இளமைக் காலம்

### தமிழ் சிறந்த இலங்கை:

நம் தமிழகத்தின் தென்பால் இலங்குவது இலங்கை நாடு. அந்நாட்டில் இன்றுந் தமிழ் வளமுற்றுச் செழித்திருக்கின்றது எனலாம். பண்டைக் காலத்திலுஞ் செந்தமிழுக்குத் தனி இடமாக இலங்கை இருந்தது. இலங்கை தமிழ் நாட்டோடு பெரிதும் இயைபுடையது. தமிழர்களின் நடை, உடை, ஒழுக்கம், கலை முதலியவை சிறப்புற விளங்குவதை இன்றும் இலங்கையிற் காணலாம். இலங்கையில் நம் தமிழ்மொழி இன்றும் ஆட்சி மொழிகளிலொன்றாக விளங்கி இலங்கைவாழ் தமிழர்களாற் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்டு வருகின்றது.

### இலங்கையின் சிறப்பு:

இந்துமாப்பெருங் கடலில், தமிழ் நாட்டின் அண்மையதாய், அழகிய வியக்கத்தக்க காட்சிகள் பலவற்றைக் கொண்டது இலங்கை நாடு. அதன் கடற்கரைக் கவினும் உள்நாட்டு மலைகளின் மாண்பும், வனங்களின் வனப்பும், தெள்ளிய இளநீரனைய குளிர்நீரைக் கொண்டு ஓடும் ஆறுகளின் அழகும் காண்போர் கண்களை விட்டு என்றுமே

அகலாதன. பண்டைய காலத்திலும் வரலாற்றுச் சிறப்புடன் பெரும் புகழ்பெற்று விளங்கியது; தற்காலத்திலும் வணிகமும் இரப்பர் (Rubber) தொழிலும் வளம் நல்கத் தனிப்புகழ் கொண்டு விளங்குகின்றது இலங்கை. ஏறக்குறைய மேனாடுகளைப் போன்று நாகரிகத்திலும், நடையிலும், உடையிலும் முன்னேற்ற மடைந்துள்ளது என்றும், தெருக்களும், மாளிகைகளும் மிகவும் தூய்மையாகவும், அழகாகவும் ஒளிர்கின்றன என்றும் ஆங்குச் சென்றோர் கூறுவர். இத்தகைய வளம் நிறைந்த, நம் தமிழர் பலர் வாழும் நாட்டினைத் தமிழர்களாகிய நாமும் நேரில் ஒரு முறையேனுங் கண்டு மகிழவேண்டும்.

நாம் பல்வேறு நாட்டிற்குஞ் சென்று அங்கங்குள்ள இயற்கை வனப்புக்களையும் கண்டு மகிழ்தல் சிறப்புடைத்து. வேறெங்குஞ் செல்வதற்குரிய வாய்ப்பில்லையெனினும் எழில்நிறை இலங்கைக்காயினும் ஒருமுறை செல்லல் பெருநலம் தருவதாகும்.

இலங்கை நாட்டில் திருக்கோணமலை என்னும் பேரூர் உளது. அவ்வூரின்கண் வேளாண் குலத்தவர் பெருஞ் சீருடனும், சிறப்புடனும், தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றனர். அக்குலத்தில் நற்குணமும், நல்லொழுக்கமும் பெற்றுத் திகழ்ந்தவர் **தம்பிமுத்துப் பிள்ளை** அவர்கள். அவர்தம் அருந்தவப் புதல்வராக, **1863-ஆம் ஆண்டு ஆவணித்திங்கள் 24-ஆம் நாளன்று** நம் **கனகசுந்தரம் பிள்ளை** பிறந்தனர்.

அவர் தந்தையார் அவ்வூர் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு வந்தவர். அதுவுமன்றி, ஏழைகளிடம் கருணையுடையவராகவும், அறம்பல புரிபவராகவும் அவர் விளங்கினார். எல்லோர்க்கும் தம்மால் இயன்ற பொருளைத்

தாராளமாகக் களிப்புடன், தக்க காலத்தில், வழங்குங் குணமாட்சி அவர்பால் நிறைந்திருந்தது. அவ்வூரார் ஒவ்வொருவரும் அப்பெரியார், ஒரு தவமைந்தனை ஈன்றெடுத்தார் எனக் கேட்டதும் பெருமகிழ்ச்சி யடைந்தனர்.

ஊர்மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக்கடலில் மூழ்கித் திளைத்துக்கொண்டிருந்தபோது, இவரைப் பெற்றெடுத்த தாய் தந்தையரின் மகிழ்ச்சியை அளவிட்டுக்கூற இயலுமா? உற்றார், உறவினர், நட்பினர் முதலியவர்களுடன் அவர்களும் பெருமகிழ்ச்சியடைந்தனர். நம் பிள்ளையவர்கள் பிறந்த நன்னாளை, நல்லதொரு பொன்னாளாகவே கருதி யாவரும் இன்புற்றனர். தம்பிமுத்துப் பிள்ளை தம் தவப்புதல்வனைச் சிறந்ததொரு தமிழறிஞராக விளங்கச் செய்யவேண்டுமென்று நினைத்தனர். அக் குழந்தையைத் தந்தையும் தாயும் மிக்க சிறப்புடன் வளர்த்து, நல்லதொரு நாளிலே அவர்க்குக் கனகசுந்தரம் என்னும் திருநாமமிட்டு வழங்கலாயினர்.

நம் கனகசுந்தரம் பிள்ளை அவர்கள், நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தம் இளமைக் கால வளர்ச்சியின் ஒவ்வொரு விநாடியிலும் பெற்றோருக்கும் பிறர்க்கும் பெரு மகிழ்வும் இன்பமும் ஊட்டினார்கள். ஆண்டுகள் ஐந்து நிரம்பின. பள்ளிக்குச் செல்லும் பருவமும் வந்தது.

———

## உ. கல்வி

### தமிழ்க் கல்வி :

இலங்கையிலுள்ள திருக்கோணமலையில் அந்நாளில் தமிழ்ப்புலமை பெற்றுச் சிறப்புற்றிருந்தவர்கள் கதிரைவேற் பிள்ளை அவர்களும், கணேச பண்டிதர் அவர்களும் ஆவர். அவ்விருவரும் மாணவர் பலர்க்குத் தமிழ் நூல்கள் கற்பித்து வந்தனர்.

சிற்றூர்களில் இருந்த பாடசாலைகளில் அக்காலத்து ஆசிரியர்கள் சின்னஞ்சிறு தமிழ் நூல்களையே கற்பிப்பார்கள். திவாகரம், திருப்புகழ், நிகண்டு, அந்தாதி முதலியவை அவர்களாற் பிள்ளைகளுக்குக் கற்பிக்கப்படும். பெருநூல்கள், கற்றுவல்ல பேராசிரியர்களிடமே சென்று கேட்டுத் தெளியவேண்டும். அவற்றுள்ளும் இலக்கியமே யாவரானும் எளிதிற் கற்பிக்கப்படும். இலக்கண நூல்கள் நுண்ணறிவுடைய சிலராலேயே கற்பிக்கப்படும். நம் தமிழ் மொழியில் பண்டைய காலந் தொட்டுப் பலரும் கற்று வரும் இலக்கண நூல்கள் தொல்காப்பியமும், நன்னூலுமே ஆகும். அவைகள் முற்றிலும் சூத்திரவடிவில் அமைந்தவை. அவைகளை மாணவர்கள் விரும்பிக் கற்பதும் ஆசிரியர்கள் விரும்பிக் கற்பிப்பதும் மிகவும் அருமை. பல அரிய பொருள்களுடன் திட்பமும் நுட்பமும் செறிந்து, பொருள்களைக் கண்ணாடிபோற் காட்டுவனவாக அச்சூத்திரங்கள் அமைந்துள்ளன. சூத்திரம் இருக்க வேண்டிய இலக்கணமும் அதுவே. 'எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும், எழுத்தறிவார்க் காணின் இலையாம்', என்பது இலக்கணங் கற்பதன் அருமையை விளக்குகின்றது. ஆனால், அவைகளின் பொருள்களைத் தக்க ஆசிரியன்மாரை அண்மிப் பாடங் கேட்கும் வாய்ப்பும் அதற்கேற்ற ஆற்றலும் ஊக்கமும் உடையார் ஒரு சிலரே அறிய முடியும். 'தொட்டுக்காட்டாத கல்வி சுட்டுப் போட்டா

லும் வருமோ ?' அத்தகைய ஆற்றலும் ஊக்கமும் இருந்த துடன் இலக்கண நூல்வல்ல ஆசிரியர்களும் பெறற்கரிய பேறாகக் கனகசுந்தரனார்க்குக் கிடைத்தனர். எனவே வாய்ப்பைப் பெற்ற இவர் மிகவும் ஆர்வமுடன் கதிரை வேற் பிள்ளை கணேசபண்டித ரிவர்களிடமும் இலக்கியத் துடன் இலக்கணங்களையுந் தெளிவுறக் கற்றுத் தேர்ந்தார்.

இலக்கண நூலில் உள்ள பாக்களின் நுண்பொருள் களையும், அச்சிறு வயதிலேயே அறிந்துகொள்ளும் ஆற்ற லும் அவருக்கிருந்தது. அவருக்குத் தமிழ் தேனெனச் சுவைத்தது. ஆங்கிலத்தையும் அவ்வயதில் வேறொரு சாலையில் கற்றுவந்த போதிலும், தமிழ்மீதுதான் சொல்ல வொண்ணா ஆர்வம் நம் பிள்ளை அவர்களுக்குத் தோன்றி யது. மிகச் சிறு வயதிலேயே திருவாதவூரர் புராணம் மறைசையந்தாதி முதலிய நூல்கட்குப் பொருள் கூறும் ஆற்றலையே பெற்றுவிட்டார் என்றால், அவர் தம் தமிழறிவு எத்துணைச் சிறந்த நிலையில் ஒளிர்ந்திருத்தல் வேண்டும் ? அவர் தம் பதினான்காவது வயதிலேயே, அவரது ஊரி லேயே, இளந் தமிழ்ப்புலவர் என்ற பாராட்டைப் பெற்று விட்டார். மிக ஆழமாக எழுத்தெண்ணியுங் கற்றிருந்தார். தன் முயற்சியாலும், ஓயா உழைப்பாலும், ஆழ்ந்த சிந்தனை யாலும் தமிழ்மொழியில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தவர் நம் கனகசுந்தரம் பிள்ளை யவர்கள் என்பது யாவராலும் பாராட்டப் பட்டதாகும். பல நாட்கள் சிந்தித்துச் சிந்தித்து, ஓதி ஓதிச் சங்க நூல்களின் பொரு ளாழத்தையும், அருமையையும், தொல்காப்பியத்தில் மறைந்து கிடக்கும் நுண்பொருள்களையும் எண்மையில் ஓர்ந்தனர். அவர்போல் முயற்சியுடையார் தமிழ்மொழியில் ஆற்றல் மிக்காராய்த் திகழ்வர் என்பது உறுதியல்லவா ?

———

## ௩. பி. ஏ. பட்டம் பெறுதல்

நம் பிள்ளையவர்கள் தம் பதினேழாம் வயதுவரையில், தாம் பிறந்த இலங்கை நாட்டிலே தமிழும், ஆங்கிலமும் கற்றுச் சிறந்து விளங்கினர். 1880-ஆம் ஆண்டில் அவர் ஆங்கிலக் கல்வியினை மேலும் கற்க விரும்பினர். சென்னை நகரம் பல்வகைக் கல்லூரிகளுங் கொண்டு விளங்குவதுடன் சென்னைப் பல்கலைக் கழகத்தின் பி.ஏ., எம்.ஏ, பி.எல்., எம். எல்.. முதலிய பட்டங்களைப் பெற்றவர்களுக்கு வெளியிடங்களிலும் நன்மதிப்பு உண்டு. இதனை, அவர் பலரும் சொல்லக் கேட்டிருந்தார். எனவே, அத்தகைய சிறந்த கல்வியை, உயரிய வகையில் பெறுவதற்குச் சென்னை செல்வது என அவர் முடிவு செய்தனர்.

இதுவரை சென்றிராத சாலப் பெரிய நகருக்கு, நெடுந்தொலைவிலிருந்து தம் பதினேழாவது வயதில் தனிமையாக வந்திருந்து தங்கி, ஆங்கிலக் கல்வி கற்பது, அக்காலத்தில் எளிதான செயலன்று. எனினும் தாம் மேலும் மேலும் கற்றுப் பேரறிவு பெறல்வேண்டுமென்ற அவருடைய இடையறா ஆர்வமும் ஊக்கமும் அவரைச் சென்னை செல்லுமாறு தூண்டின. எவ்விதமும் சென்னை நகர் சென்று மேலும் படித்துப் புகழ்பெறவேண்டும் என அவர் முடிவு செய்தார்.

மனக்களிப்புடனும், ஊக்கத்துடனும், துணிவுடனும், இலங்கையிலிருந்து புறப்பட்டார். சென்னை வந்து சேர்ந்ததும், தாம் தங்குவதற்கென ஒரு தனி வீடொன்றை அமைத்துக்கொள்ள விரும்பித் தற்போது இந்து தியாலாஜிகல் உயர்நிலைப்பள்ளி இருக்கும் கட்டடத்தைக் குடிக்கூலிக்கு எடுத்துக் கொண்டார். அங்கே அவர் தன்னந்தனியாக இருந்து, கல்வி கற்கத் துவங்கினர்.

எப்போதும் தாம் படிக்கும் அறையில் தனிமையாக இருந்து நூல்களை ஆழ்ந்த சிந்தனையுடன் கற்கும் வழக்கத்தைக் கைக்கொண்டார். இன்சுவை உணவையும், பல் சுவைப் பண்டங்களையும் அவர் உள்ளம் விரும்பவில்லை. அனைவரும் விரும்பும் உடன் பயிலும் மாணவர் நட்பையுங் கூட அவர் நாடவில்லை. வீணகப் பொருளற்ற பேச்சுக்கள் பேசிக் காலங் கழிக்கும் வெற்றுரையாளர்களையும் அவர் வெறுத்தார். பல்வேறுவகை இன்ப நிகழ்வுகளிலும் மனதைச் செலுத்தாது தனித்திருந்து, சிறந்த கல்விமானக விளங்கவேண்டியதற்குரிய அரிய நூல்களைக் கற்பதிலேயே முனைந்திருந்தார். அச்சிறு வயதில் ஒன்று தான் அவர்க்கு இன்பந்தந்தது. கல்வி தொடங்குங்கால் துன்பம் போன்று தோன்றினும் முடிவில் இன்பமாகத் திகழும் எனத் தமிழ்ப்பேரறிஞர்கள் பலரும் பற்பல இடங்களில் கூறியிருக்கின்றனர். ஆனல், நம் பிள்ளையவர்களுக்குத் தொடக்கத்திலேயே கல்வி இன்பமளித்தது. அவர் பெற்ற பயன் யார் பெறுவார்? கல்வியே கழி பேரின்பம் என இளவயதிலேயே எண்ணி முயற்சியுடையராய் விளங்கிய பிள்ளையவர்கள் போன்று இக்கால மாணவரொவ்வொருவரும் முயலல் பெரும்பயன் தருவதாகும்.

அக்காலத்தில் சென்னைப் பல்கலைக் கழகம் மத்திய பாடசாலைத் தேர்வு என்ற ஒருவகைத் தேர்வும் நடத்தி வந்தது. சென்னையைச் சேர்ந்த சூளை என்னும் பகுதியிலுள்ள **செங்கல்வராய நாயகர் பாடசாலையில்**தான் பிள்ளையவர்கள் முதலில் சேர்ந்தார். அங்கு நன்ருகக் கற்று, மேற்கூறிய தேர்வில் தேறினர். பின்னர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிற் சேர்ந்து, எப். ஏ. தேர்விலும் சிறப்புறத் தேர்ந்தார். மேற்கூறிய தேர்வுகளில் மிக்வும்

சிறந்து விளங்கினமையால், அவர் அறிவின் ஆற்றலை ஆசிரியர்களும், மாணவர்களும் பெரிதும் பாராட்டினார்கள்.

பள்ளிவாழ்விலே எம்மாணவரும் அடையாத சீரையும், சிறப்பையும் பெற்றார் நம் பிள்ளை. ஒவ்வொரு வகுப்பிலும், முதன் மாணவனாக முதற்பரிசே பெற்றுத் திகழ்ந்தார். கனகசுந்தரந்தான் முதற் பரிசைப் பெறுபவன் எனப் பரிசளிப்பு நாளுக்கு முன்னமேயே அனைவரும் கூறி விடுவார்கள். அவர்கள் எதிர்பார்த்தது போலவே, பிள்ளையவர்களும் முதற் பரிசு பெறத் தவறுவதில்லை. ஒரு மாணவனுக்கு முதற் பரிசு பெறுவதைக் காட்டிலும் மேலான இன்பமும் மகிழ்வும் வேறு ஏதாவது உண்டா?

பச்சையப்பன் கல்லூரியில் எப். ஏ. வகுப்பு வரையில் கற்ற பின்னர், சென்னை மாகாணக் கல்லூரியில் சேர்ந்து பி. ஏ. படித்தார். ஊக்கத்துடனும் ஆர்வத்துடனும் கல்வியில் முனைந்து விளங்கிய நம்பிள்ளையவர்கள் பி. ஏ. வகுப்பிலும் முதன் மாணவராகவே விளங்கினார். பி. ஏ. பட்டத் தேர்வில் அவர் தத்துவசாத்திரத்திலும், தமிழிலும் முதல் மாணவராக விளங்கி அதற்கான அரிய பரிசுகளும் பெற்றார். அப்போது அக்கல்லூரியின் ஆசிரியர்களும் தலைமை ஆசிரியரும் அவரிடம் காட்டிய பேரன்பையும் பெருமதிப்பையும் இத்தன்மையென உரைக்க இயலாது. நண்பர்கள் பலரும் அவரைப் பெரிதும் பாராட்டினர். கோட்டை முற்றுகையிட்டு வெற்றி வாகைசூடி வெளிவரும் வெற்றி வீரனுக்கு ஏற்படும் மகிழ்வினும் அவருள்ளம் பெரிதும் மகிழ்ந்தது. தம் எண்ணம் நிறைவேறியதை எண்ணி எண்ணி இன்புற்றார்.

---

## ௬. அரசாங்கத்தில் அலுவல்

நம் பிள்ளையவர்கள் ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்றுத், தமிழில் செம்புலமை பெற்று அக்காலத்தில் விளங்கிய போதிலும், தகுந்த வேலையை அடைய முடியாமல், சிறிதுகாலம் மனந் தளர்வுற்றார். அக்காலத்திலும் வேலையில்லாத் திண்டாட்டம் சென்னையில் இருந்தது. மாணவர்கள் படிக்கும்போது பலதிறப்பட்ட, மனக் கோட்டைகள் கட்டுவதுண்டு. பி. ஏ. பட்டம் பெற்று விட்டால், பெரியதொரு பதவியைப் பெற்றுவிடலாமென்று எண்ணுவதும் இயற்கையே. ஆனால், மாணவர்களில் பெரும்பாலோர் தங்கள் விருப்பம் நிறைவேறாமல், ஏமாற்ற மடைவதுதான் வழக்கம். அந்நிலையில், கனகசுந்தரமும் சென்னையில் தமக்கேற்ற ஒரு பணியினைப் பெறுவதில் முனைந்தார்.

நம் பிள்ளையவர்கள் சென்னையில் தன்னந் தனிமையாகக் கல்விகற்று வந்தவர் என்று முன்னமே கூறினோம். அவருக்குத் தகுந்த உதவி புரிவார் இல்லாமையாலும், அவரிடம் செல்வம் மிகுதியாக இல்லாமையாலும், தாம் கல்லூரியை விட்டதும், சிறிதுகாலம் சிற்றூர் என்னும் ஊரின்கண் இருந்த ஒரு பாடசாலையில் தலைமை ஆசிரியராகச் சிறிதுகாலம் இருக்க இசைந்தார். பின்னர் அவர் தம் பேராற்றலுக்கும், பெரும்புலமைக்கும் ஏற்ற இடமாக வேறிடஞ் செல்ல விரும்பினவராய்ச் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆங்கில ஆசிரியராக அமர்ந்தார். அதுவும் அவருக்கு அவ்வளவு தக்கதாகத் தோன்றவில்லை. சிறிதுகாலம் சென்றதும், அப்பதவியையும் வெறுத்து, இறுதியில் நுங்கம்பாக்கத்திலுள்ள கல்வி இலாகா அலுவலகத்தில், கணக்காளர் வேலையை ஏற்றுக்

கொண்டார். அவர் மனப்பான்மைக்கு அதுவும் ஏற்ற தாகத் தோன்றவில்லை. சிறிதுகாலம் மனச்சோர்வுடன் வேறுவழியின்றி அவ் வேலையைப்பார்த்து வந்த பின்னர் சென்னையிலுள்ள அரசியலார் செயலகத்தில் (Secretariat) ஓர் அலுவலைப் பெற்றார். அங்கு வேலை பெறுவதென்பது மிகவும் அரிதாக அப்போதும் இருந்தது. நம் பிள்ளை யவர்கள் அங்கு கல்விப்பகுதியின்கீழ் ஒரு தக்க அலுவலைப் பெற்றுப் பணியாற்றிவரத் தொடங்கினர்.

அங்கு மிகக்களிப்புடனும், ஊக்கத்துடனும் தம் பணியில் அவர் ஆர்வம் காட்டினர். அல்லும் பகலும் ஊக்கத்துடன் உழைத்துத் தம் வேலையின் நுட்பங்களை அறிந்து, தமக்குமேலிருந்த அதிகாரிகளிடம் விரைவில் பெருமதிப்பைப் பெற்றுவிட்டார். ஆங்கில மொழியில் எப்பொருளைப்பற்றியும் மேலதிகாரிக்குக் குறிப்புக்கள் எழுதி அனுப்புவதில் மிகவும் வல்லுநர் எனப் பேர் பெற்றார். அக்குறிப்புக்களில் சொல்லழகும், பொருள் ஆழமும் நிரம்பியிருக்கும். அத்தகைய குறிப்புக்கள் எழுது வதிலும், நுட்பமாகிய வேலைகளைச் செய்வதிலும், அவர் பேராற்றல் பெற்றவர் என்று எல்லோரும் சொல்லிப் பாராட்டினர். பின்னர் அவர் அங்கேயே மேற்பார்வை நிலையின் உயர்வைப் பெற்றார். அப்பணியினையும் அவர் ஒழுங்காகவும், சிறப்பாகவும் புரிந்துவந்து நல்ல பேரும் புகழும் அடைந்து இறுதியில் உதவித் தொகையும் பிற் காலத்தில் பெறுவாராயினர்.

# ரு. இல்லற வாழ்வு

"அறமெனப்பட்டதே இல்வாழ்க்கை" என இல்வாழ்வின் பெருமையைக் கூறியவர் தெய்வப்புலவர். இல்வாழ்க்கையின் ஏற்றத்தைப் பலநாட்டுப் பேரறிஞர்களும் ஒத்துக்கொண்டுள்ளனர். மக்களிடையே அன்பும், அருளும், மகிழ்வும் வளரவேண்டுமானால் அவர்கள் அவற்றைப் பெறத் துணைசெய்வது இல்வாழ்க்கை ஒன்றேதான் எனல் தவறாகாது.

கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் அன்பும் பற்றும் உடையவராய் வரவுக்குத் தக்க செலவுசெய்து மகிழ்வுடன் வாழ்தல் பெருஞ் சிறப்புடையதாகும். கணவன் மனநிலை யறிந்து ஏற்றவாறு நடந்து அவனை மகிழ்விக்கும் கடமை மனைவிக்கு உண்டு. அஃதேபோன்று மனைவியின் மனநிலையறிந்து தக்கவாறு அவளைப்போற்றும் பொறுப்பும் கணவனுக்கு உண்டு. தம் இல்லும் உற்றார் உறவினரும், ஊரும், நாடும், உலகமும் உய்வதற்கேற்றன செய்யும் பொறுப்புங் கடமையும் இருவருக்கும் உண்டு.

நம் பிள்ளை பி. ஏ. பட்டம் பெற்றவர். அத்துடன் அரசியற் பணிமனையில் அலுவல் பார்ப்பவர். எனவே, அவருக்குப் பெண்தருவதற்கு 'நான், நீ' எனப் பலர் முன் வந்தனர். செல்வர்கள் பலர் சீருஞ் சிறப்பும் பெரிதும் நல்கிப் பெண் தருவதாகச் சொன்னார்கள். தாய்தந்தையரும் உற்வினர்களும் பற்பல இடங்களிற் பெண்தேடினர்.

நம் பிள்ளையவர்கள் மட்டும் திருமணத்திற்கு ஏற்ற பெண் பணக்காரர் வீட்டுப் பெண்ணல்ல. நல்ல அழகும் பண்பு நலங்களும் அமையப்பெற்றவளே யென எண்ணினார். அத்தகைய பெண்ணணங்கினையே தேர்ந்தெடுக்குமாறும் பணத்தையோ வேறு செல்வங்களையோ கருதாது

குணநலன் ஒன்றையே கருதுமாறும் தம் தாய் தந்தையர்களை வேண்டினர்.

தம் மகனின் நல்வாழ்வில் கருத்துடைய தாய்தந்தையர் இதனை மறுப்பார்களா? அதிலும்,

'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற' (திருக்குறள்: சுக)

என்ற வள்ளுவர் பொன்மொழிக்கு இலக்கியமாக மிளிர்பவரல்லரோ கனகசுந்தரனார்! ஆகவே, அவருடைய வேண்டுகோளின்படியே பெற்றோர்கள் பெண்தேட லானார்கள்.

அவர்கள் விருப்பம் நிறைவேறிற்று. யாழ்ப்பாணத்துச் சிதம்பரமுதலியாரவர்களின் அருந்தவச் செல்வியார் திருவாட்டி சுந்தரத்தம்மையார் பலவகைகளில் தம் செல்வனுக்கு ஏற்றவராயிருத்தல் கண்டு அவரையே மணம்பேசி முடித்தனர்.

திருமணம் இனிதே முடிந்தது. மாட்சி நிறைந்த அம் மங்கையாரின் அன்பும் பண்பும் கனகசுந்தரனாரைப் பெரிதும் மகிழ்வித்தன. இல்வாழ்வின் பயனை எய்தப் பெற்றோம் என மகிழ்ந்தார். அம்மையாரும் தம் கணவர் பேரறிஞர் என்பதை எண்ணி எண்ணி இன்புற்றார். அவருக்குப் பணிசெய்தலே தம் கடமை என எண்ணினார்.

இருவர் மனமும் ஒத்து நடந்தால் இல்வாழ்வின் ஏற்றத்திற்கு வேறென்ன வேண்டும்? எத்துணைச் சிறந்த செல்வத்தையும்விட மன ஒற்றுமை உயர்ந்ததன்றோ! எனவே, அவர்கள் வாழ்க்கை மிகவும் சிறப்பாக நடைபெற்று வந்தது.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு," (திருக்குறள்: சுO)

என்றனர் பொய்யில் புலவர். இல்வாழ்வின் மாட்சிமைக்கு மக்கட்பேறு இன்றியமையாதது. மக்கட்பேறின்றி மனம்

நைந்து கோயில்கட்கும் குளங்கட்கும் அலைவாரையும், மருந்து பல உண்பாரையும் நாம் கண்டிருக்கின்றோம்.

நம் பிள்ளையவர்களுக்கு நான்கு செல்வப் புதல்வர்களும் அருந்தவப் புதல்வி யொருவரும் தோன்றினர். **இராசராசன், இராசசேகரன், இராசேசுவரன், இராசமார்த்தாண்டன்** எனத் தம் புதல்வர்கட்கும், **செல்வநாயகி** எனத் தம் செல்விக்கும் பெயரிட்டு மகிழ்ந்தார். அவர்கள் மழலைப்பேச்சிலும் பிள்ளைமை விளையாட்டுகளிலும் உள்ளத்தைப் பறிகொடுத்து இன்புற்றனர். நம் பிள்ளையவர்களும் அவர் தம் துணைவியாரும் பளிங்கனைய அவர் தம் இளமுகங்களிற் பரவி விளையாடும் புன்முறுவல்களைக் கண்டு தம்மை மறந்து இன்புறுவர். இவ்வாறாக எவ்வகையாலும் சிறப்புடன் எழில் நிறைந்து விளங்கியது அவர் இல்வாழ்க்கை. "இல்லதென் இல்லவள் மாண்பானால்?" எனத் தம் அரும் பெரு மனைவியாரோடு மகிழ்வுடன் வாழ்ந்துவந்தார் நம் பிள்ளையவர்கள். ஒரே புதல்வியரான செல்வநாயகியார் மிகவும் செல்வமாகப் போற்றி வளர்க்கப்பட்டார். அனைவரும் அவர்பால் மிகவும் அன்பு பாராட்டினர்.

---

## சு. இளவல் சரவணமுத்துப்பிள்ளை

இல்லத்தில் இனிது ஒளிர்ந்த நம் பிள்ளையவர்கள், மற்றொரு சிறந்த வாய்ப்பும் பெற்றிருந்தார். அஃது, கிடைத்தற்கரிய அன்பினராய் விளங்கிய திரு. சரவணமுத்துப் பிள்ளை அவர்களை இளவலாகப் பெற்றதுதான். அவரும் பிள்ளையவர்களைப்போலவே, ஆங்கிலக் கல்வியிலும், தமிழ்க் கல்வியிலும், ஒவ்வொரு வகுப்பிலும், தலைசிறந்து விளங்கிப் பற்பல பரிசுகளும் பெற்று, மாணவர் உலகில் பெரும்புகழ் பெற்றார். பி. ஏ. பட்டமும் பல சிறப்புகளுடன் அடைந்து திகழ்ந்தார். இளையவர் பி. ஏ. பட்டத்தைப் பெற்ற பின்னர், சென்னைமாகாணக் கல்லூரி நூல்நிலையத்தில் அலுவல் பெற்று, உலக வாழ்க்கையில் புகுந்தார். நூல்நிலையத்தில் வேலை கிடைத்தமையால், அவர் சோம்பலை மேற்கொள்ளாமல், ஊக்கத்தையே கலனாகப்பூண்டு, பற்பல நூல்களையும் பெருங்களிப்புடன் கற்றுவந்தார். கல்வியில் தனியின்பத்தைக் கண்ட அச்செம்மல், நூல்நிலையத்திலிருக்கும் வாய்ப்பைப் பெற்றால் வாளாவிருப்பரோ! தம் அலுவலோடு படிக்கும் பணியையும் முதன்மையாகக்கொண்டு வாழ்ந்தார்.

சரவணமுத்துப் பிள்ளை ஆர்வமும், அறிஞர் பலருடன் அளவளாவும் தன்மையும் பெரிதும் கொண்டவர். அவர் தாம்கற்ற கல்வி பலர்க்கும் பயன்படும் வகையில் சொற்பொழிவுகள் செய்துவரலானார். கனகசுந்தரனாரோ தம் கல்வியின் மாட்சியை வெளிக்குச் சிறிதளவு காட்டவும் முன்வரார். புகழ்மாலையைப் புனைந்துகொள்ளவும் விரும்பமாட்டார்; பிறர் தம்மை அறிந்துகொள்ள வேண்டுமென்றும், உலகில் பெரும்புகழ் பெறவேண்டுமென்றும் விரும்பமாட்டார்.

ஆனால், அவையனைத்தும் தாமே அவரை வந்து அடைந்தன. இளவலோ அவைகள் அனைத்தையும் முழுவதும் விரும்பியவர். அதற்கெனப் புலரோடுங் கலந்து உரையாடவும், பேசி மகிழவும், தம் புகழ்ஒளியை யாண்டும் பரப்பவும் விரும்பினார். சென்னையில், அவர் ஆற்றிய சொற்பொழிவுகளின் காரணமாக, விரைவில் அவர் பெயர் பரவிற்று. சிறந்த புகழை இளவயதில் பெற்ற சரவணமுத்துப் பிள்ளை, சித்தூரிலுள்ள உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராகச் சிறிதுகாலம் இருந்தார். அப்பாடசாலையில் அவர் இணையற்ற நல்லாசிரியர் என்னும் பேரும், புகழும் பெற்றார். அவர் ஒரு சிறந்த தமிழ்ப்புலவர் எனப் பலர் அறியமாட்டார்கள். தமிழில் சுவைமிகுந்த, **"தத்தை விடுதூது,"** என்ற ஒரு சிறு நூலையும், **"மோகனாங்கி,"** என்ற ஓர் இனிய நூலையும் அவர் தமிழில் இயற்றியுள்ளார். அவைகளின் பாவமைப்பையும் சொல்நயத்தையும் பொருள் ஆழத்தையும் அனைவரும் ப்ாராட்டினர்.

சரவணமுத்துப் பிள்ளை தம் தமையனார்பால் பேரன்பு கொண்டவர்; பெருமதிப்பும் உடையவர். அவர் பெருமையைத் தாம் சென்ற இடமெல்லாம் பேசி வருபவர். எப்போதும் படித்தவண்ணமாகவும், பலர்க்குப் பல வகைகளில் நன்மை செய்பவராகவும் விளங்கினார். நம் பிள்ளையவர்களுக்கு அவர் ஒப்பற்ற செல்வமாகவும், துணையாகவும் இருந்தார். அவரை இளவலாகப்பெற்றது தான் பெறற்கரிய பேறு என நம் பிள்ளையவர்கள் மிகுந்த களிப்புற்றிருந்தார். அருமையான மனைவியையும், அன்பான தம்பியாரையும், அருந்தவப் புதல்வர்களையும் செல்வியையும் பெற்றிருந்த நம் பிள்ளை அவர்கள் வாழ்வு மிகவும் சிறப்பாகவே நடந்துவந்தது.

---

## எ. இரு பேரிழப்புக்கள்

### இன்பமும், துன்பமும்:

இவ்வுலகில் முற்றிலும் இன்பம் பெற்று வாழ்ந்தார் ஒருவருமிலர். எனவே, இன்பத்தையே நாடாமல், கடமை ஒன்றையே நாடிக் காலத்தைக் கழித்தல் நலம் பயப்பதாகும். பலர்க்கும் நன்மை செய்துகொண்டே, உலகிலுள்ள துயரங்களை மறந்து, வாழ்க்கையைச் செலுத்துவதற்கு முயலவேண்டும். இவ்வுலகம் தொல்லை நிறைந்தது என்று முற்றிலும் வெறுத்து, பட்டினத்தடிகளைப் போலவும், தாயுமானவர் போலவும், துறவியாகச் செல்வதை எல்லோரும் கைக்கொண்டு வெற்றி பெறுவது எளிதன்று. மொத்தத்தில், இவ்வுலக வாழ்வை முற்றிலும் துயர்தருவது என்று சொல்வதற்கில்லை. இக்கருத்துப் பற்றியே, "இன்பம் உண்டேல் துன்பம் உண்டு" என்றும், "துன்பம் உண்டேல் இன்பம் உண்டு" என்றும், நம் முன்னோர்கள், வாழ்வில் கண்ட உண்மைகளை நமக்கு முற்பாதுகாப்பாக முன்னரே கூறியிருக்கின்றனர்.

> "இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள்
> துன்பம் உறுதல் இலன்" (திருக்குறள்: சுஉக)

என்றார் நம் தெய்வப்புலவர்.

ஒருவன் இன்பமடைகின்றபோதும், அவன் அதில் அமிழ்ந்துவிடக் கூடாது. ஏனென்றால், அவ்வின்பம் நிலையற்றது. அறியாமல் அதில் மயங்கிவிடுவது தவறு. இவ்வுலகத்தில் இன்பத்தையும், துன்பத்தையும் இறைவன் ஒவ்வொருவரிடத்திலும் இணைத்து வைத்திருக்கின்றான் என்ற உண்மையை அறிதல் வேண்டும். மக்கள் எப்போதும் உலக இன்பத்தில் மயக்கம் கொள்ளாமல், தத்தமக்கு

ஏற்பட்ட கடமைகளை ஒழுங்காகச் செய்துகொண்டு, தம்மால் இயன்ற அறங்களைக் கூடிய இடங்களில் எல்லாம் செய்து வாழ்தலே உலகில் நல்வாழ்க்கை யாகும்.

இல்லறத்தில் நல்லின்பமும், நல்வாழ்வும் பெற்றிருந்த நம் பிள்ளையவர்கள் எதிர்பாராத சில இன்னல்களுக்கும் ஆளாயினர். அவர் மிகவும் நல்லவர்; குணத்தில் சிறந்தவர்; கல்வியில் பெரியவர்; ஒழுக்கத்திலும் தலை சிறந்தவர். இருப்பினும், அத்தகைய நல்ல கல்விமானுக்குப் பெரிய துயரங்களும் தோன்றின.

அஃதாவது, சென்னையிலும், சித்தூரிலும், இன்னும் பல இடங்களிலும் ஆங்கிலப் புலமையாலும், தமிழ்ப் புலமையாலும், சொல்வன்மையாலும், நலத்தின் ஆர்வத்தாலும், சொற்பொழிவுகள் சிறு நூல்கள் மூலமாக மக்களுக்குத் தொண்டு புரிந்துவந்த, அவர் இளவல் சரவண முத்துப் பிள்ளையவர்களைப் பிரிய நேரிட்டது. அவர் அப்பொழுது சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரியில் இயற்கைத் தத்துவ சாத்திரம் கற்பிப்பவராகத் திகழ்ந்து, நல்ல பேரும் புகழும் பெற்று வந்தார்.

உலகில் எதிர்பாராதது இளமையிற் சாவு. ஒரு பேரறிவாளருக்கு அது நேர்ந்தால், அதை நாம் என்னவென்று எடுத்து உரைக்க முடியும்? பேரறிவாளராக விளங்கிய, தமிழில் தனிப் பற்றுக்கொண்டு ஒளிர்ந்த, நம் சரவணமுத்துப் பிள்ளை, திடீரென நோயுற்று இவ்வாழ்வின் அரும்பயன் ஈதென்றும் அறியாமல், இவ்வுலக வாழ்வை ஒல்லையில் நீத்தார்! தமிழன்னை ஒரருமை மகனை இழந்தாள்! தமிழ் உலகம் ஒரு பெரும் புலவரை இழந்தது! மாணவர் உலகம் ஒரு சிறந்த ஆசிரியரை இழந்தது! எனத் துயருற்றனர்

அனைவரும். அவர் உயிரினும் மேலாகக் கருதிய, அரும் பெறல் இளவலை, அகாலத்தில் இழந்த கனகசுந்தரனார் மனம் பதைத்தார்; திடுக்கிட்டார்; நடுங்கினார்; "என்னே இவ்வுலக வாழ்வு!" என்று மனம் வெறுப்புற்றார். உள்ளம் உடைந்தார்; ஒன்றும் சொல்லப் பெறாமலும், செய்யப் பெறாமலும், துயரக்கடலில் மூழ்கிப் பிறர்க்கு அதை வெளியாக்காமல், மௌனநிலை பூண்டு, தமக்குள்ளேயே நொந்து நொந்து, நைந்து, நைந்து, நலிவுற்றார். அடைதற் கரிய அருமைத் தம்பியை இழந்த, பெருந்துயரினை ஆற்றொணாது தத்தளித்திருந்தார்.

துயரின்மேல் துயர்

நம் பிள்ளையவர்களின் இன்னல்கள் அத்துடன் நிற்க வில்லை. சில ஆண்டுகளாகவே, அவர் மனம் நொந்து வாழ்ந்து வருகையில், அவர் அரும்பெறல் வாழ்க் கைத் துணைவியாராகிய, சுந்தரத்தம்மையாரும், இவ்வுலக வாழ்வைத் துண்ணென நீத்தனர். அடுத்தடுத்தே துயர் தோன்றுவது இவ்வுலக இயற்கை என்பார்கள். எவ்வ ளவோ அரும்பாடுபட்டு, ஆங்கிலத்திலும், தமிழிலும் பெரும் புலமை பெற்று, நடுநிலைமை தவறாமல், அவரது கடமையை மறவாமல், ஒழுங்காக இல்லறத்தை, மேலான முறையில் நடத்திவந்த நம் பிள்ளையவர்களுக்கா இத்தகைய பெருந் துயர் நேர்வது என்று கலங்கினர் அனைவரும்.

நம் பிள்ளையவர்களுக்கு நான்கு செல்வப் புதல்வர் களும், ஒரு செல்வப் புதல்வியும் இருந்தனர் என்று முன் னமே சொன்னோம் அல்லவா? அவர்கள் ஐவரும் அப் போது சின்னஞ்சிறுவர்கள். தாய் முகத்தாற் களிக்கும் இளஞ் சேய்கள். இத்தகைய துயர் நிறைந்த சூழ்நிலையில்

வாழ்க்கையை இனி எவ்வாறு நடத்துவது என்று மனம் பதைத்தார் நம் பிள்ளை அவர்கள்.

உலகில் உடன்பிறந்தாரைப் பெற்றவர்களுக்குத் தோள்வலி பெரிதும் உண்டு என்று சொல்லுவார்கள். தம் ஒரே இளவலான சரவணமுத்துப் பிள்ளையை இழந்த நம் பிள்ளைக்கு, தோள்வலி போயிற்று. நம் ஔவைப் பிராட்டி கூறிய, "பொற்றொடியோடு எவையும் போம்" என்ற அமுத வாக்கின்படி, ஒப்பற்ற வாழ்க்கைத் துணைவியாரை இழந்த நம் பிள்ளையவர்கள், இவ்வுலக இன்பங்கள் அனைத்தையும் அருமை மனைவியை இழந்த அன்றே, இழந்ததாக எண்ணினர். எண்ணி எண்ணி மனம் நொந்தார். உண்மையில், நம் பிள்ளையவர்களுக்கு உலகில் உண்டாகிய விருப்பம் அனைத்தும், அவ்வம்மையார் பிரிந்த ஞான்றே குறைந்தன எனலாம். இன்பம் ஒழிந்த அன்றே துன்பமும் பிறந்தது!

ஐந்து செல்வ மக்களை இல்லத்தில் வைத்துக் கொண்டு, தன்னந் தனியாகத் தவித்தார். மன வன்மையைச் சிறிது இழந்தபோதிலும், சிறிது சிறிதாக இழந்த மன வன்மையை மீண்டும் பெறுவாராயினர். ஐந்து செல்வச் சிறுவர்களையும் கலங்காமற் காக்க வழி யாதென ஆராய்ந்தார். உலக வாழ்க்கையில் வெறுப்பும், சலிப்பும் அடைந்த போதிலும், நம் பிள்ளையவர்கள் அவரது தமிழ்க் கல்வியையும், அருமை மக்களையும், அருந் துணைகளாகக் கொண்டு, மற்றொரு புதிய உலக வாழ்வில் புகுந்தனர்.

---

## அ. கலியாணம்

நம் நாட்டில் மனைவியை இழந்தவன் மறுமணம் செய்து கொள்ள நினைக்கிறான்: மற்றவர்களும் ஒப்புகின்றனர். அறுபது வயதில், அவள் போய்விட்டாலும், அவன் மற்றொரு இளம்பெண்ணை மணம் புரிவது தகுதியுடையது என மறுமணத்தை மாண்புறு செயல் என்று கருதுகின்றவர்களும் உண்டு. அறிவிற் சிறந்த சிலரே ஒரு மனைவியை இழந்தால், மறுமனைவியை மணப்பதில்லை என்ற மனத்திடம் பெற்று விளங்குகின்றார்கள். சிறுவயதில், அஃதாவது, முப்பத்தைந்து வயதிற்குள், மனைவியை இழந்தவன் மறுமணம் புரிவதிலாவது பொருள் இருக்கின்றது. அத்தகைய மணத்தை ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், அதற்கு மேற்பட்டார் மணந்துகொண்டு வாழ விரும்புவதை ஒத்துக்கொள்ள முடியுமா? காதலிருவர் கருத்தொருமித்தாதரவுபடவேண்டிய இன்ப வாழ்வாகுமா அது? தந்தையும் மகளுமாம் வயதிலா காதலர் வாழ்க்கையைக் காணமுடியும்? அவன் காதலிக்கலாம் இளம் பெண்ணைப் பார்த்து! அவள் காதலிப்பாளோ?

நம் பிள்ளையவர்கள் திருமணம் புரிந்த வயதோ முப்பத்திரண்டு. அவர் இல்லறவாழ்க்கையில் களிப்புற்றிருந்த ஆண்டுகள் பத்து. அவருடைய நாற்பத்திரண்டாம் வயதில் வாழ்க்கைத் துணைவியாரை இழந்தார். ஐம்பத்தைந்து வயதுவரையில் அவர் அரசியல் அலுவலில் தக்க ஊதியம்பெற முடியும். அதற்குப் பின்னரும் அவர் அவருக்கு வாய்த்திருந்த ஆங்கிலப் புலமையாலும், தமிழ்ப் புலமையாலும், பல ஆண்டுகள் பல வழிகளில் பெரும் பணம் ஈட்டமுடியும். அவர் நல்ல உழைப்பாளி; உழைப்பின் பயன் செல்வம். ஆதலால், அவர் வேண்டிய

அளவுக்கு மேலாகவே பொருள் ஈட்ட வாய்ப்பிருந்தது. இருப்பினும் மீண்டும் மணம்செய்துகொள்வதென்று அவர் எண்ணவே இல்லை. அருமைச் சேய்களினிடம் பேரன்பு வைத்து, அவர்களை அன்னைபோல் பாராட்டிச் சீராட்டி, அன்புடன் வளர்த்துவந்தார். அவரே தந்தையும், தாயும் ஆனார்; ஆசிரியருமானார். அவர்களை அல்லும், பகலும் கண்ணிமைபோல் காத்து வந்ததுமன்றி, அவர்களுக்குத் தலைசிறந்த கல்வியினையும் அளித்து ஒவ்வொரு மைந்தனும் பி. ஏ. பட்டம் பெறும்படி செய்தார். அவர்களுக்கு நல்ல தமிழறிவும் ஊட்டினார். அவர்களிடம் கண்டிப்பும், ஒழுங்கும், கனிவும் காட்டினார். அவர்கள் இவரைத் தந்தையும் தாயும் ஆசிரியருமாக எண்ணி வழிபட்டு வந்தனர். அச்சமும் மதிப்பும் அன்புங்கலந்த வழிபாடே அவர்களிடங் காணப்பட்டது.

அவர் தம் ஒரேஒரு செல்வப் புதல்விக்கும் சிறந்த தமிழறிவையும் ஆங்கில அறிவையுந் தந்து, சிறுவயதிலிருந்தே நல்ல பழக்கங்கள் பெறும்படிசெய்து, நற்குணத்தில் சிறந்த பெண்மணியாகத் திகழச்செய்தார். பின்னர், சென்னைமாகாணத் தபால் ஆபீசுத் தலைவராக இருந்த, ராவ் பகதூர், க. வைத்தியலிங்கம் பிள்ளையவர்கள் புதல்வர் **திரு. அரங்கநாதன்** என்பவருக்குத் திருமணம் செய்து கொடுத்தார். அப் பெண்மணி அறிவு ஒழுக்கங்களிலும் உயர்ந்து, இல்லறவாழ்வில் இனிதுவாழ்ந்து வருகின்றனர். பிள்ளையவர்களின் மைந்தர்களும் தற்போது உயர்ந்த பதவிகளில் இருந்து வருகின்றனர். அவர்களுக்குப் பிள்ளையவர்கள்மீது உள்ள அன்பிற்கும், மதிப்பிற்கும் எல்லை கிடையாது என்றே கூறலாம். அக்காலத்தில் சென்னைமாகாணக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக இலக்கணத்தில் தனிப்புலமை பெற்ற, திருவாளர், இராசகோபாலப்

பிள்ளை அவர்கள் இருந்தனர். கனகசுந்தரம் பிள்ளையவர்கள் தொல்காப்பியத்தையும் நன்னூலையும் அவருடன் நன்கு ஆராய்ந்தார். மேற்கூறிய இராசகோபாலப் பிள்ளை இலக்கணத்தில் வல்லுநராக இருந்தமையால், அரிய பல நுணுக்கங்களையும், ஆழ்ந்த கருத்துக்களையும் அவ்வப்போது எடுத்துக் காட்டியபோது, நம் பிள்ளையவர்கட்கு உண்டாகிய இன்பத்திற்கு அளவில்லை. தொல்காப்பியத்தையும், சங்க நூல்களையும் மேற்கூறிய பிள்ளையவர்களிடம் ஐயம் திரிபற ஆராய்ந்துணர்ந்தார். கல்வி யின்பத்தில் மூழ்கினார். ஒவ்வொரு சங்கநூலையும் பன்முறை படித்துப்படித்துப் பொருள் நயங்களையும், ஆழங்களையும் நுணுக ஆராய்ந்து அறிந்து, சங்க நூல்களிலும், தொல்காப்பியத்திலும், நன்னூலிலும் பெரும்புலமை பெற்றார். சென்னையில் இருந்த பெரும் புலவர்களுள் ஒருவரானார். இல்லறத் துணைவியாரை இழந்த அவர் தமிழ் நூல்களிடம் பெருங்காதல் கொண்டு படித்துப் பழகியதால் வாழ்க்கைத் துயரையும் ஒருவாறு மறந்துவிட்டார். கவலைகளை மறந்து களிப்பெல்லாம் தமிழில் கண்டு ஒருவாறு அமைதியுடன் வாழ்ந்துவரலானார்.

---

## கூ. தமிழ்ப் பேராசிரியர்

அருமை மனைவியாரை இழந்து, தமிழ்ச்சுவை யொன்றே துணையாக வாழ்ந்துவந்த பிள்ளையவர்களுக்கு அரசியல் அலுவல் கசந்தது. அவர் ஆங்கிலத்திலும் அலு வல்துறையிலும், மிகவும் சிறந்து விளங்கியபோதிலும், தமிழ்ச் சுவையைப் பருகப்பருகத் தமிழ்ப்பணி புரிவதி லேயே நாட்டம் சென்றது.

ஆகவே, அரசாங்க அலுவலை விடுத்தார். அவ ருடைய புலமையை உணர்ந்த சென்னைக் கிறித்துவக் கல் லூரியின் தலைமை ஆசிரியர் அவருக்குக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் பதவியை அளிக்க மனம் உவந்து முன் வந்தனர். தமிழாசிரியர் பொறுப்பை ஆர்வத்துடன் நம் பிள்ளையவர்களும் ஏற்றனர்.

நம்பிள்ளையவர்கள் தமிழ்ப்பேராசிரியராக அமர்ந்த தும், ஒரு புதிய தமிழுலகைக் கண்டார். மாணவர்க ளுடன் பழகும் மாண்புறும் இன்ப உலகை யினிது கண்டார். இதுவரை தமிழ்க் கல்வியில் அவர் மாத்திரம் இன்பம் பெற்று வந்தார். கல்லூரியில் ஆசிரியரானதும், மாணவர்களுக்கும் தமிழ்மொழியில் இன்பம் ஊட்டி மகிழ்ந்தார். அவரும் இன்புற்று, மாணவர்களையும் இன் புறச்செய்து, தமிழ்க் கல்வியை மிகுந்த திறமையுடனும், மாணவர் விரும்பும் வண்ணமும் கற்பித்து வந்தார். அவர் எப்பொருளையும் சுருக்கமாகவும், தெளிவாகவும், பொருத்தமாகவும் விளக்கிக் கூறுவார். ஆழ்ந்த கருத்துக் களையும், நுட்பங்களையும், சிற்சில சொற்களில் அளந்து காட்டுவார். ஒரு வீண் சொல்லும் மறந்தும் உரையார். வகுப்புக் கட்டுப்பாடும் சிறந்த நிலையில் இருக்கும். மாணவர் கள் அவருடைய அறிவாற்றலுக்கு மிகுந்த மதிப்பளித்துட

போற்றினர். அவர்பால் பெரிதும் அன்பு பாராட்டினர். கல்லூரித் தலைவரும் உடன் பணியாற்றும் மற்றைய ஆசிரியர்களும் அவரிடத்தில் சிறந்த மதிப்பு வைத்திருந்த னர். அவ்வாறு ஆசிரியர் தொழில் அவருக்குப் பிடித்த மானதாகவும் அமைந்து விளங்கியது. பச்சையப்பன் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகவிருந்த தி. செல்வக்கேசவராய முதலியார் எம், ஏ. அவர்கள் மறைந்துவிடவே அப்பொறுப்பிற்கு நம் பிள்ளையவர்களே தகுதியுடையார் எனக் கண்டு நம் பிள்ளையவர்களையே அப் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினர். அக்கல் லூரியில் படித்த நம்பிள்ளையவர்கள் அதனைமறுக்க விய லாது ஒப்புக்கொண்டார். அவரது தமிழறிவினைப் பச்சை யப்பன் கல்லூரி மாணவர்களுக்கும் வழங்கினர். பச்சை யப்பன்கல்லூரி மாணவர்கள் அனைவரும் மகிழ்ச்சியடைந் தனர். மாணவர்களுக்குச் சங்கநூல்களின் நயங்களையும், நுட்பங்களையும், நேரம் வாய்த்தபோதெல்லாம் விளக்கிச் சொல்லிவந்தார். இனிமையும் எளிமையும் நிறைந்த அவர் விரிவுரைகள் மாணவர் உள்ளங்களைப் பெரிதுங் கவர்ந்தன. தமிழ்மொழியினை நன்கு கற்கவேண்டும் என்ற ஆசையைத் தூண்டின. மாணவர்கள் தமிழார்வமும் தமிழ் அறிவும் பெற்றுத் திகழ்ந்தனர்.

## மாணவர்களிடம் கண்டிப்பு :

மாணவர்களிடம் அன்பு எத்துணை உண்டோ அத் துணைக் கண்டிப்பும் அவர் உடையராயிருந்தார். தேர்வு களில் மார்க்குகள் தருவதிலும் மிகவும் கண்டிப்பாயிருந் தார். குறைந்த மார்க்கு வாங்குகிற மாணவனை, "நம் தாய் மொழியில் இவ்வளவு குறைந்த மார்க்கு வாங்குவதில் உனக்கு நாணமுமில்லையா ?" என அன்போடு கடிந்து

கொள்வார். 'உன் தாய்மொழியை அசட்டை செய்யாதே' என அறிவுரை கூறித் திருத்த முயல்வார். அவ்வாறு தமிழுலகில் சிறந்த பேராசிரியராகப் பணியாற்றி வந்தனர். பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தேர்வுக்கு உறுப்பினராகவும் பல ஆண்டுகள் பணிபுரிந்து வந்தார். நான்கு வருட காலம் அத்தேர்வுக் கழகத்திற்குத் தலைவரா யிருந்தார். மதுரைத்தமிழ்ச் சங்கமும் அதன் தேர்வாளர்களிலொருவராக அவரை அமைத்துப் போற்றியது.

ஆங்கிலத்திற் பட்டம் பெற்று அரசியல் அலுவலில் அமர்ந்து ஊதியம் பெற்று வாழ்ந்ததைவிடத் தமிழ் ஆசிரியர் பணியே அவருக்கு பேரும் புகழும் தந்தது. தமிழன்பர்கள் தமிழறிஞர்கள் கல்வித்துறையாளர்கள் மாணவர்கள் அனைவரும் அவரைப் போற்றினர்.

பிள்ளையவர்களும் துயரனைத்தையும் தமிழ்ப் பணியின் செயலில் மறந்து புதிய ஊக்கமும் ஆர்வமும் கொண்டு தமிழன்னையின் சீருக்குத் தம்மாலியன்றன செய்து வந்தார். தமிழ்த்தாயின் இன்னருளே வாழ்வில் சிறந்த இன்பமளிப்பது என்று தமிழ் முன்னேற்றத்திற்குப் பல்லாற்றானும் செயலாற்றி மகிழ்ந்தார்.

---

## ௧௦. மாணவர் மாண்பு

நம் கனகசுந்தரம்பிள்ளை தமிழ்ப்பேராசிரியர் ஆன தும், அவர் செந்தமிழறிவின் திறத்தையறிந்த பலரும் அவரிடத்தில் இலக்கண நூலும், சங்க நூல்களும் பாடங் கேட்க வேண்டுமென்று விரும்பினர். அந்தாதி நூல்களை யும், புராணங்களையும், திருக்குறள், நாலடியார், நன்னூல் முதலிய நூல்களையும் நன்குகற்று ஓரளவு தமிழ்ப் புலமை பெற்றிருந்த பல அறிஞர்களும்; நம் பிள்ளையிடம் தொல் காப்பியமும், சங்க நூல்களும், தனித்தனியே பாடங் கேட்க முன் வந்தனர். அவரிடத்தில் பாடங் கேட்டு அவர் மாணவர் எனப் பெறும் பெயரையே பெருஞ் சிறப்பாக எண்ணி மாணவராக விரும்பிய புலவரும் பலரிருந்தனர்.

அவர் குடியிருந்த சென்னை ஆயலூர் முத்தையா முதலியார் வீதியிலுள்ள அவர் திருமனையில், மாண வர் கூட்டமும், புலவர் கூட்டமும் ஒன்று கூடின. பிள்ளை யவர்களோ மிகவும் கண்டிப்பானவர். ஒழுங்கில் கண்டிப் புடையவர். எனவே அவரை அணுகிய மாணவர்களும், மிகவும் எச்சரிக்கையோடும் விழிப்போடும் பாடங் கேட்டு வந்தனர். அவர் பாடம் சொல்லும் நுட்பங்களிலும் ஆழ்ந்த பொருள்களிலும் இன்பங் கண்டனர். சாந்தமும், கருணையும், மெய்யன்பும் உடைய பெருந்தகைமை நிறைந்த அவர் திருவுருவத்தில் தமிழன்னையின் பொலி வைக் கண்டு போற்றினர். கைம்மாறு கருதாது அடுத் தார்க்கெல்லாம் தமிழ்ச் செல்வத்தை வாரிவாரி வழங்கிய அவரின் வள்ளன்மையை வாயார வாழ்த்திக்களித்தனர்.

நம் புலவர் பெருமானிடத்தில் பாடங் கேட்ட புலவர் களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள், **சோமசுந்தர**

**முதலியார், மணி. திருநாவுக்கரசு முதலியார், மோசூர். கந்த சாமி முதலியார் பி. ஏ., வித்துவான், சுப்பிரமணிய ஆச்சாரி யார்** முதலியோர் ஆவர்.

மயிலை, சோமசுந்தர முதலியார் சைவ விரிவுரைகள் செய்வதில் பெரும் புகழ் பெற்றவர். சென்னை மக்கள் அவர் விரிவுரைகளைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டினர். தாயுமானவர் பாடலை அவர் பாடக் கேட்டால், அவையி லுள்ளோர் உளம் கசிந்து நெக்கு நெக்கு உருகும். மேலும், நகைச்சுவை ததும்பப் பேசுவதிலும், கருத்துக் களைத் தெளிவாக விளக்குவதிலும் அவர் சிறந்து விளங்கினர்.

மணி, திருநாவுக்கரசு முதலியாரைப் பற்றியோ அனை வரும் அறிவர். பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரிய ராகப் பெரும் புகழுடன் திகழ்ந்தவர். அவரோடு உடன் பிறந்தாற்போன்ற அன்பும் இன்பும் தவழத் தூயநட்பு பூண்டு இலங்கியவர் மோசூர், கந்தசாமி முதலியார் பி. ஏ. அவரும் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் விரிவுரை யாளராக இருந்து, புகழ் பெற்றவர். தங்கசாலை வீதியில் அவருக்கு அழகிய பெரிய வீடுகள் இரண்டு உண்டு. அவரும், திருநாவுக்கரசும் எஞ்ஞான்றும் பிள்ளையவர் களின் சங்கநூற் புலமையை எண்ணி எண்ணி இறும்பூது எய்துவர். திருவாளர், சுப்பிரமணிய ஆச்சாரியார் அவர்களும், பிள்ளையிடத்தில் பெருமதிப்பும், பேரன்பும் கொண்டவர். சிறந்த உழைப்பாளி; தமிழ் ஆர்வம் மிக்க வர். வித்துவான் பட்டம் பெற்றவர்; பிள்ளையவர்களிடம் தொல்காப்பியமும், சங்க நூல்களும் பாடங் கேட்டவர்; தற்போது பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் விரிவுரை யாளராக இருந்து வருகின்றவர்.

---

## கக. தமிழ்த்தொண்டு

பழந்தமிழ் நூல்கள் பலவற்றையும், ஏட்டுப்படிகளோடு பன்முறை பன்முறை ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்தங்கள் செய்து கொடுக்கும் பெரும் பணியினையும் ஆர்வமுடன் நம் பிள்ளையவர்கள் செய்துவந்தனர். ஏறக்குறைய பழைய தமிழ்நூல்கள் பலவற்றின் முன்னுரையில், "இது தி. த. கனக சுந்தரம் பிள்ளையவர்களால் பார்வையிடப் பெற்றது," என்ற தொடரைக் காணலாம். பிள்ளையவர்களின் திருத்தம் பெற்ற நூல்களுக்கு ஒருவிதத் தனிமதிப்பு உண்டு. எத்தகைய பழைய தமிழ்நூலை அச்சிட்டாலும், பிள்ளையவர்களின் பார்வையுடன் அச்சிடவேண்டுமெனப் பலரும் விரும்பினர். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் வெளியிட்ட பல பழைய தமிழ் நூல்கள், உரை நூல்களுக்கும், பிள்ளையவர்கள் இடையே இடையே உதவிகள் புரிந்ததுண்டு. திருவாளர்கள் அநவரதவிநாயகம் பிள்ளை, நமசிவாய முதலியார், வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலியோர் வெளியிட்ட உரை நூல்களுக்கும், அவர்கள் மேற்பார்வை உண்டு. சிவஞானபாடியம், திருமந்திரம் முதலிய நூல்கள் வெளியானபோதும் அவைகளைத் திருத்தமுற வெளியிட உதவியும் வந்தனர். பேராசிரியர்களான சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள்; திருவனந்தைச் சுந்தரம் பிள்ளை அவர்கள், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் அவர்கள் முதலியவர்களோடு இணைந்து பணியாற்றிப் புகழும் பெற்றவர் நம் பிள்ளையவர்கள்.

செந்தமிழ் வளர்ச்சிக்காக, யாழ்ப்பாணத்தில் பெரும் புலவராக, அக்காலத்தில் தனிச்சிறப்புப் பெற்றிருந்த, ஆறுமுக நாவலர் சென்னையில் ஓர் அச்சகம் நிறுவினார். அதற்கு வித்தியானுபாலன அச்சி யந்திரசாலை என்று

பெயர். ஆறுமுக நாவலர் பெரும்புலமையும், அழுத்தமான சைவப் பற்றும் உடையவர். செந்தமிழ் நாடும், இலங்கை நாடும், அவர் பெரும் புலமையை வியந்து போற்றின. முதன் முதலாகத் தமிழ் உரைநடையை உயர்ந்த முறையில் தமிழ் உலகுக்குத் தந்தவர் அவரே. அவர் வெளியிட்ட நூல்கள் பலவற்றையும் கைம்மாறு கருதாமல், உள்ளன்போடும் பார்வையிட்டு அச்சுப் பிழை திருத்திக் கொடுத்தவர் நம் பிள்ளையவர்களே.

சென்னையிலிருந்த பெரும்புலவர் இராசகோபாலப் பிள்ளை அவர்களோடு இணைந்து கம்பராமாயணத்தில் சில பகுதிகளை மிகவும் நுண்ணிதாக ஆராய்ந்ததுடன் பின்னர் தனியாகப் பாலகாண்டத்திற்கு உரையும் எழுதினர்.

வடமொழி, தென்மொழிகளில் சிறந்த புலவரான சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளையவர்களோடு " நம்பி அகப் பொருளுக்கு " ஓர் அரிய உரை எழுதிப் பிள்ளையவர்கள் வெளியிட்டிருக்கின்றனர். தமிழ்நாவலர் சரிதையும், ஈழ மண்டலத் தேவாரமும், திருப்புகழும் பிள்ளையவர்களின் குறிப்புரையுடன் வெளிவந்தன.

சென்னை அரசியலார் பேரகராதி யொன்றைப் பதிப்பிக்க முன் வந்து அதற்காக ஏராளமான பணமும் செலவு செய்தனர். அப் பதிப்பிற்கு நம் பிள்ளையவர்களையும் உதவி ஆசிரியராக அழைத்தனர். அவரும் ஓராண்டு இருந்து வந்தார். அப்போது அவருக்கு மாதச் சம்பளம் இருநூற்று ஐம்பது ரூபாய் என்பர். அத் தொகையையும் பொருட்படுத்தாமல், அவர் கொள்கைகட்கு அப்பணி ஏற்றதன்றெனத் தோன்றியதும், அதனை விட்டு நீங்கினர். அவர் நண்பர்கள் பலரும், புலவர்கள் பலரும், மாணவர்கள் பலரும், மாதச்சம்பளம் இருநூற்று

ஐம்பது ரூபாயை மதிக்காமல், பெரும் பதவியைவிட்டு அகலுவது கூடாது என்று அவரிடம் வற்புறுத்தினார்கள். ஆனால், அவர் உளம் ஏற்காத பொறுப்பை ஒருநாளும் ஏற்றுப் பணிசெய்ய இயலாது என மறுத்துவிட்டார்.

நம் பிள்ளையவர்கள் வடமொழியிலும் நல்ல புலமை பெற்றவர். எனவே, அவரை **மும்மொழிப் புலவர்** என்று கூறுதலும் சாலும். அவர் வடமொழிப் புலமை பெற்றதின் பயனாக, வால்மீகி இராமாயணத்தில், சுந்தர காண்டம் என்னும் பகுதியைத் தமிழில் மொழி பெயர்த்தார். **அதைத் திருவாளர், கலியாணராம ஐயர்** என்பவர் 1911-ஆம் ஆண்டில் வெளியிட்டனர்.

அறிவு செறிந்த, பொருள் பொதிந்த, ஓசை நிரம்பிய அரும் பாக்கள் பலவும் அவ்வப்போது யாத்துள்ளார். **அவை பண்டைத்தமிழ்ப் புலவர் இயற்றிய பாக்களை போல் தலை சிறந்துவிளங்கும்.**

---

## ௧௨. உலவாப் பெருமை

1922-ஆம் ஆண்டில் நம் பிள்ளையவர்கள் பிழைக்க வொண்ணுத நோய்வாய்ப்பட்டுச் சிலநாட்கள் உடல் வருந்தினர். அவருக்குப் பிணி வந்தபோது, அவர் செல்வப் புதல்வர்களும், செல்வப் புதல்வியும் உளம் நடுங்கினர்கள். மாணவர்களும், புலவர்களும் மனம் வருந்தினர்கள். அவர் குடியிருந்த ஆயலூர் முத்தையா முதலியார் வீதியே கலங்கிற்று. அனைவரும் பிள்ளையவர்களுக்குப் பிணி வந்துற்றது எனக் கேள்வியுற்றதும், மனம் பதைபதைத்தனர். அவர் எவ்விதத்திலாயினும் பிழைத்துவிடவேண்டும் என்று அருமை மைந்தர்கள் பெரும்பாடுபட்டு, மருத்துவ வல்லுநர்கள் பலரைக் கொண்டு, மருந்துகள் கொடுத்தனர்; இரவும், பகலும் இனிய பணிகள் செய்து, கண்ணீர்விட்டு, உள்ளம் கலங்கி இறையருளை வேண்டினர். எத்தகைய மருந்தும், சிகிச்சையும் அவர் பிணியை நீக்கியபாடில்லை. அந்நிலையில் நம் பிள்ளையவர்களுக்கும் பிழைப்பது அரிது என்று தோன்றிவிட்டது. ஆனல், அதற்கு அவர் அஞ்சவில்லை. உலகில் சுமார் அறுபது ஆண்டுகள் வரையில் வாழ்ந்தது போதும் என்றும், இருந்தவரையில் இயன்ற தொண்டைப் புரிந்து வந்ததை எண்ணியும், உலகில் சாவு இயற்கை என்பதை உன்னியும், அவர் இவ்வுலகை விட்டு மகிழ்வுடனேயே செல்ல விரும்பினர். தமிழுலகைப் பிரிவதை எண்ணியே வருந்தினர். ஆனி மாதம், புதன் கிழமையன்று, ஊனுடல் கிடக்க உலவாப் பேரின்பவுடல் பெற்றனர்.

பிள்ளையவர்கள் மறைந்த செய்தி காட்டுத்தீபோல் விரைவில் பரவிற்று. தமிழ் மக்கள் அனைவரும், அடைந்த மனத்துயரை ஏட்டில் எழுத இயலாது. தவ மைந்தர்கள்

அலறி அழுதனர் ; செல்வமகள் தேம்பித் தேம்பிப் புலம்பினர் ; மாணவர்களில் பலர் கண்ணீர்விட்டு உள்ளம் வெதும்பினர் ; கூடிக்கூடிப் பிள்ளையவர்களின் பெருமையைப் பேசிப்பேசி மனம் நொந்தனர் பலரும். எல்லோரும் மாபெரும் தமிழ்ப்புலவர் மறைந்தார்! மறைந்தார்!! என்று சொல்லித் துன்புற்றனர். ஒரு பெரும் புலவர், "இனித் தமிழுக்குவரம்பு இல்லை, உரை கல்லும் இல்லை," என்று பிற புலவர்களிடம் கூறிச் சிந்தை நொந்தார். தமிழ் மக்களின் துயர்க்கண்ணீரோடு, நம் பிள்ளையவர்கள் பொன்னுடலத்தினைப் பல மாணவர்கள் மலர்விமானத்திற் பொறுப்புடன் ஏந்திச்சென்று, சுடலையிற் சேர்த்தனர். செந்தமிழ் நாட்டில் அருந்தொண்டு ஆற்றிய, பல மாணவர்க்கு அறிவு கொளுத்திய, அப்பொன்னுடலை ஆரத்தழுவிச் செந்தீ எழுந்தது. சூழ்ந்து நின்ற அனைவர் உள்ளமும் அவ் வெம்மை தாங்காது வாடின.

பிரிவாற்றாமை புலவர்கள், உள்ளங்களைச் சுட்டன. அவர்கள் ஏக்கம் சொற்களில் அமைந்துகேட்டார் உள்ளங்களை யெல்லாம் துயர்க்கடலில் ஆழ்த்தியது. மறைந்த மாபெரும் புலவரின் மாண்புகளை எண்ணி எண்ணி, உளநைந்து அனைவரும் கண்ணீருகுத்தனர்.

"நற்றுந் துபீயானி நாடபுத வாரமதி
முற்றும் வழிச்சதுர்த்தி முந்தமகம்—பெற்றமிசை
ஊர்ந்தான் அடுக்கி உயர்கனக சுந்தரவேள்
ஆர்ந்தான் அவலந்தீர்ந் தான்."

## இரங்கற்பாக்கள்

மொழித்திறத்தின் முட்டறுக்கும் மூதறிவுக் கிரங்குவமோ
பழுத்ததமிழ் நூலாய்ந்த பண்பினுக்கிங் கிரங்குவமோ
அழுத்தமுறத் துணிந்துரைக்கும் ஆராய்ச்சிக் கிரங்குவமோ
வழுத்தகுநற் குணமுடைய மால்கனக சுந்தரனே.

கா. நமச்சிவாய முதலியார்.

ஆங்கிலமா மொழிக்கடலி னருங்கரையு மினிதறிந்தாய் !
ஓங்கியபைந் தமிழ்க்கடலி னுண்டுறையி னுளந்திளைத்தாய் !
தேங்கியசீர் வடமொழியுந் தேர்ந்தபுல முடையாய்நீ
யாங்குறவாய்ச் சென்றனையோ ? யார்விழைவாற் சென்றனையோ ?

கா. ர. கோவிந்தராச முதலியார்.

பத்துப்பாட் டுடன்சிந்தா மணியாதி
சங்கநூல் பலவும் பாடம்
நித்தமுமே சொல்லியருள் குருமணியே !
நினைப்போலிந் நீணி லத்தில்
சித்தமய ராவண்ணம் சொல்பவரார் !
சாந்தமதிற் சிறந்த சான்றோய் !
கர்த்தனது கழலடைந்த பெரும்புலவோய் !
நின்பெருமை கழறற் பாற்றோ ?

பாலூர். வேலுதேசிகர்.

வாராத பேரில்லை ! வண்டமிழில்
வருமையந் தீர நின்பாற்
சேராத பேரில்லை ! தெளிபொருளை
உளங்கொண்டு செழிய நட்புக்
கோராத பேரில்லை ! குணத்தோடு
பழகுதற்குக் கொழுந்த மிழ்க்கண்
பாராத நூலில்லை ! சீர்க்கனக
சுந்தரனே ! பார்ப்ப தென்றோ ?

மணி. திருநாவுக்கரசு முதலியார்.

செந்தமிழ்தேர் பண்டிதனே ! சென்னைத் துரைத்தனத்தார்
மந்தணத்தும் பல்கலைதேர் மன்றத்தும் மாமதுரைச்
செந்தமிழ்சேர் சங்கத்தும் சேர்ந்தோய் ! உயர்கனக
சுந்தரப்பேர்ச் செம்மால் ! நீ சொல்லாமற் செல்குவதோ.

**ஊ. சா. வேங்கடராம ஐயர்.**

உன்னருமைப் புதல்வரெலாம் உளம்வாட
மாணவர்கள் உன்னி ஏங்க
மன்னியசீர்க் கவிஞரெலா மதிமயங்க
நாமடந்தை மாழ்கிச் சோர
பன்னரிய மெய்வருந்தப் பயனில்லாப்
பொய்களிக்கப் பாரை நீத்த
என்னருமைக் குருகனக சுந்தரனே
என்றன்னை இனிக்காண் பேனே.

**திரு. மோ. கந்தசாமி முதலியார்**

உடலமெலாங் கண்கொடுபற் பலகாலாய்ந்
தோய்ந்திடினு முணர்வார் யாவர் ?
தொடலரிய ஐம்பெருங்காப் பியமருந்தொல்
காப்பியமுந் துறுமிக் கூறுங்
கடலனைய கனகசுந் தரக்குரவ
னெனத்தேர்ந்தெங் கண்ணே வானோர்
விடலரிய விருந்தெனவே விழைந்தனரே
இங்கெமக்கார் விளம்பாய் மன்னே.

**திரு. மயிலை. சோமசுந்தர முதலியார்.**

# தி. செல்வகேசவராய முதலியார்

## க. தோற்றமும், கல்வியும்

சிறப்புமிக்க சென்னைமா நகரின் மருங்கில் "திருமணம்" என்னும் அழகான பெயருடைய சிற்றூர் ஒன்றுள்ளது. 'திரு' என்றால் அழகு என்றும், செல்வம் என்றும் பொருள்படும். மணம் என்றால் திருமணம் என்றும், வாசனை என்றும் பொருள்படும். எவ்வளவு ஆழ்ந்த கருத்துக்களோடு ஊருக்குப் பெயரிட்டுள்ளனர் பாருங்கள்!

அச் சிற்றூரில் தமிழ்மணம் தலைசிறந்து விளங்கும் உயர் வேளாண்குடியில் தோன்றினார் ஒரு தமிழ்ப் புலவர். அவர் கேசவசுப்பராய முதலியார் ஆவர். அவர் சீரிய தமிழ்ப்புலமை பெற்றுச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் புலவராக விளங்கினார். அவர் வாழ்க்கைத் துணைவியார் பாக்கியம் அம்மையார். அவ்விருவரும் நல்லொழுக்கமும், நல்லியல்பும், வாய்மையும், பேரருளுங் கொண்டவர்கள். அவர்களின் நவமைந்தராக, 1864-ஆம் ஆண்டில் நம் செல்வக்கேசவராய முதலியார் தோன்றினார்.

உலகில் இல்லற வாழ்க்கையைப் பெற்ற ஒவ்வொரு ஆடவரும், மகளிரும் மகப்பேற்றைத்தான் இணையிலாப் பெரும்பேறாகக் கருதுவர்.

> "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பிற"

என்றவாறு கேசவசுப்பராய முதலியார் அறிவு சான்ற அருங்குழவியாகிய செல்வக்கேசவரைப் பெற்றபோது எய்திய இன்பத்திற்கு எல்லை இல்லை. இல்லறத்தின் மாண்பினை,

" வரையா நாளில் மகப்பேறு குறித்துப்
பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே "

என்று ஒரு புலவர் பெருந்தகை கூறியுள்ளார்.

இல்லறத்தின் பயனாகிய மகப் பேற்றினைப் பெற்ற தந்தையார் தாம் மைந்தனைப் பெற்ற பெரும் பேற்றிற்கு மட்டும் மகிழ்ந்துவிடவில்லை. தாம் ஆற்றிய அருந்தவத்தின் பயனாகப் பெற்றெடுத்த செல்வக்கேசவரை, அறிவு நிரம்பிய, மாண்பமைந்த புதல்வனாகச் செய்தல்வேண்டும் என்று திட்டமிட்டனர். தமிழர்களின் தலைசிறந்த அறிஞராகிய தெய்வப்புலவர் திருவள்ளுவர் கூறிய,

" தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது "

என்னும் திருக்குறளின் நுண்பொருளின் சாரத்தை நன்கு பருகினவர் அவர். தம் மக்கள் அறிவுடையராக இருப்பது தமக்கே யன்றி மாநில மக்களுக்கும் இனிமை பயக்கும் என்பதை நன்கு உணர்ந்தவர். உணர்ந்தது மட்டுமன்றி, தாம் உணர்ந்ததைச் செயலிலுங் காட்டுதல் முதன்மையென்றும் கருதியவர். ஆதலால், தமக்கு ஒரு மைந்தன் பிறந்த ஞான்றே ஒரு பெரிய பொறுப்பு தமக்கு ஏற்பட்டுவிட்டது என்றும், அப்பொறுப்பை இனிது நிறைவேற்ற வேண்டுமென்றும் முடிவுசெய்தார்.

" தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல் "

என்ற திருக்குறளின்படி, தம் மைந்தனைக் கற்றோர் சபையில் சிறந்து விளங்குமாறு செய்தல்வேண்டும் என விரும்பினர்.

செல்வக்கேசவர் திண்ணிய உடலுடன் வளமுற வளர்ந்துவந்தார். சின்னஞ் சிறு வயதிலேயே ஔவையார் அருளிச்செய்த பொன்மொழிகளாகிய,

"அறஞ் செய விரும்பு"
"ஆறுவது சினம்"

போன்ற பொன்மொழிகளைத் தந்தையார் கற்பிக்குந் தோறும் திரும்பக் கூறித் தந்தையாரை மகிழ்விப்பார். இவ்வாறு தமிழ்ச் சுவையைத் தொட்டில் பருவத்திலேயே தந்தையார் தம் மைந்தர்க்கு ஊட்டத் துவங்கினர்.

செல்வக்கேசவர் பள்ளிக்குச் செல்லும் பருவம் அடைந்ததும், அவர் தந்தையார் அவரைப் பாடசாலைக்கு அனுப்பியதோடு தாமும் அவருக்குத் தம் மனையில் ஓர் ஆசிரியராக அன்றன்று பாடங்களைக் கற்பித்துவருவார். அக்காலத்தில் ஆங்கில மொழிக்குத்தான் பெரு மதிப்புண்டென்று சொல்லவேண்டியதில்லை. ஆங்கிலத்தோடு தமிழையும் ஆர்வத்தோடு தந்தையார் மைந்தர்க்கு நாடோறுங் கற்பித்துவந்தார். பொருள்பொதிந்த தமிழ்ப் பாடல்களைச் சிறுவயதிலேயே தந்தையார்பால் கேட்ட செல்வக்கேசவர் தமிழ்மொழியில் தனிப்பற்றுக் கொண்டார். எனினும், அவர் ஆங்கிலத்திலும் ஆர்வமுடையவரா யிருந்தார். இவ்வாறு இளமையிலேயே இரு மொழிகளிலும் இன்பங்கண்ட தமிழ்ப் பெருமக்களில் செல்வக்கேசவரும் ஒருவராவார். அவர் தமது பாடசாலையில் எல்லா வகுப்புக்களிலும் பாடங்கள் அனைத்தையும் ஒழுங்காகவும், முறையாகவும் கற்று வகுப்பில் முதல் மாணவராக ஒளிர்ந்து, ஆசிரியர்களிடத்திலும், மாணவர்களிடத்திலும் பெரும்புகழ் பெற்றார்.

நம் செல்வக்கேசவரின் கல்லூரிப் படிப்பும் பச்சையப்பன் கல்லூரியிலே தொடங்கியது. அங்கு மெட்ரிகுலேஷன் தேர்வில் நம் முதலியார் தேர்ந்தது மிகவும் பாராட்டற்குரியதாக இருந்தது. அக்காலத்தில் மேற்

கூறிய தேர்வில் தேர்ச்சியடைபவர் வெகு சிலரேயாயிருந் தனர். அவ்வளவு கடினமாக அத்தேர்வு காணப்பட்டது. எல்லாப் பாடங்களிலும் குறிப்பிட்ட ஓர் அளவிற்கு எண் (மார்க்கு) வாங்கியாக வேண்டுமென்ற திட்டம் இருந்தது. இப்போது பள்ளியிறுதித் தேர்வின் காரணமாகக் கையா ளப்படுகின்ற முறைகள் ஒன்றும் அத்தேர்வுக்கு இல்லை. ஆதலால், மாணவர்கள் மேற்கூறிய வகுப்பிற்கு வந்தால் கல்வியில் பேரச்சங் கொள்வார்கள். அத்தேர்வைக் கடந்த மாணவர்கள் சிற்சிலரே யாதலால், நம் செல்வக் கேசவர் கடத்தற்கரிய அக் கருங்கடலை எளிதில் தாண்டி, எப். ஏ. வகுப்பில் புகுந்தபோது, அடைந்த இன்பம் மிக வும் பெரிது. மேலும், அக்காலத்தில் கல்லூரியில் உயர் தரக் கல்வி கற்கும் புண்ணியம்பெற்ற வேளாண் குடியில் பிறந்த மாணவர்கள் மிகச்சிலரே.

நம் முதலியார் பச்சையப்பன் கல்லூரியில் உயர்தர வகுப்பில் படிக்கும்போது ஆங்கில நூல்களையும், தமிழ் நூல்களையும் தளராமல் ஓதிக் கல்வியின்பத்தை இருமொழி களிலுங் கண்டு, அம்மொழிகளில் சிறந்து விளங்கிய புலவர் பெருமக்களின் நுண் கருத்துக்களைச் செவ்விதின் அறிந்து, இன்பம் நுகர்ந்தனர். இருமொழிகளிலும் ஒவ்வொரு தனிப்பட்ட இன்பத்தைக் கண்டபோதிலும், தமிழ் நூல் களில் பிறக்கும் இன்பம், ஆங்கில நூல்களினுல் பிறக்கும் இன்பத்திலும் விஞ்சி இருத்தலை அவ் வயதிலேயே கண்டு கொண்டார். இரு மொழிகளிலும் குறிக்கப்பட்ட பாடப் புத்தகங்களையன்றி, வெவ்வேறு நூல்களையும் தாமாகவே கற்று, மாண்பொருள்களின் சாரத்தைப் பருகத் துவங்கி ஞர். "பாடை யேறினும் ஏடது கைவிடேல்," என்ற பழமொழியின் சாரத்தை நுகர்ந்தவர்போல், நம் செல்வக் கேசவர் எஞ்ஞான்றும் புத்தகமும், கையுமாகவே இருக்க

விரும்பினர். உலகில் மெய்யின்பம் அளிக்கவல்லவை மெய்ந்நூல்களே என்று அறிந்து, தம் காலத்தை எல்லாம் அல்லும், பகலும் கல்வி கற்பதிலேயே கழிப்பாராயினர். இத்தகைய சிறப்பைப் பெற்ற நம் முதலியாருக்கு எப். ஏ. பரீட்சையில் தேர்ச்சி பெறுவது அரிய செயலாயில்லை. ஆங்கிலத்திலும், தமிழிலும், ஏனைய பாடங்களிலும் தலைசிறந்து விளங்கி, பி. ஏ. பட்டத்தைப் பெருமையுறப் பெற்றார். அவர் தாய், தந்தையர் இருவரும் அடைந்த இன்பத்திற்கு அளவேயில்லை. நண்பர்கள் பற்பலர் அவரைப் பி. ஏ. பட்டம்பெற்ற முதலியார் என்று புகழ்ந்து புகழ்ந்து பாராட்டினார்கள். இப்போதுகூட சென்னைப் பெத்துநாய்க்கன் பேட்டையிலுள்ள ஒரு வீதிக்கு எம். ஏ. அரங்கநாத முதலியார் வீதியென்று பெயர் வழங்குகிறது. அரங்கநாத முதலியார் சென்னைமாகாணக் கல்லூரியின் (Madras Presidency College) தலைமை ஆசிரியராக இருந்தவர். அரங்கநாத முதலியாரின் பெயரைச் சென்னையில் அனைவரும் அறிவர். அம் முதலியாரை இன்றும் அரங்கநாத முதலியார் என்று கூறாமல், எம். ஏ. அரங்கநாத முதலியார் என்றுதான் எவரும் குறிப்பிடுவர். எனவே, அக்காலத்தில் வேளாள ரான்வர்கள் பி. ஏ. பட்டமும், எம். ஏ. பட்டமும் பெறுதல் எவ்வளவு அரும் பெருஞ்செயலாக இருந்ததென்பது சிந்திக்கத்தக்கது.

செல்வக்கேசவர் கல்லூரிக்கல்வி பெற்றுப் பெருஞ் சிறப்புடன் திகழ்ந்து வருகையில், திருக்குறளிலுள்ள நுண்பொருள்கள் மற்றெந் நூல்களிலும் இல்லையென்பதை இனிது உணர்ந்தார். ஒவ்வொரு குறளையும் பன்னிப் பன்னிப் படித்து, அவற்றின் பொருளாழத்தையும், நயத்தையும் நுணுகி அறிந்து, நல்லின்பம் பெற்றார். மற்றும் கம்பராமாயணத்தின் கவியின்பத்தைச் சுவைத்துச் சிந்தை

மகிழ்ந்தார். ஆங்கிலமொழியிற் பெரும் புலமைபெற்ற மில்டன், ஷேக்ஸ்பியர் முதலிய பேரறிஞர்கள் எழுதிய கவிதைகளையும், அவற்றின் பொருள் நயங்களையும், தமிழ்க் கம்பராமாயணத்துடன் ஒப்பிட்டுப் பார்த்து, கம்பராமாயணத்தின் கவிதை நயமும் கற்பனை நயமுமே சிறந்திருத்தலைக் கண்டு களித்தார்.

செல்வக்கேசவர் பி. ஏ. படிப்பு முடிந்தவுடன், சென்னை மாகாணக் கல்லூரியில் தமிழ் எம். ஏ. வகுப்பிற் சேர்ந்தார். அவர் காலத்திலே தான் தமிழ்மொழியைப் பாடமாகக் கொண்டு எம். ஏ. பெற விரும்பவில்லை. விஞ்ஞானத்திலாவது, கணிதத்திலாவது, ஆங்கில மொழியாராய்ச்சியிலாவது எம். ஏ. பட்டம் பெற்றால்தான் அரசாங்கத் துறைகளிலும், கல்லூரிகளிலும் பெரும் பதவிகளை அடைய முடியும் என்று அவர்க்கு நன்கு தெரியும். எனினும் பெரும்பொருளை ஈட்டிப் பெரும் போகங்களை நுகர வேண்டுமென்று அவர் எண்ணவில்லை. தமிழ்மொழிப் புலமை பெறுவதையே பேரின்பமாக அவர் விழைந்தார்.

ஆதலால், அவர் பொருளாசையை விட்டுக் கல்வியையே தமக்குரிய பொருளாக உள்ளபடி நினைத்தார். தமிழையும் பற்பல வழிகளில் தம்மாலியன்ற வரையில் வளர்க்க வேண்டுமென்று விழைந்தார். ஆதலால், முதல் முதலாகத் தமிழ்ப்புலமையைக் கொண்டே எம். ஏ. பரீட்சைக்குச் சென்றார். அக்காலத்தில் அவருக்கு இணையான தமிழ்ப்புலமை பெற்றவர் இல்லை. தமிழில் எம். ஏ. பட்டம் முதன் முதலாகப் பெற்றார். பின்னர் மாணவர்கள் அவரைப் பின்பற்றலானார்கள்.

---

## உ. திருமணமும், இல்லறமும்

செல்வக்கேசவர், எம். ஏ. பட்டம் பெற்றுத் தம் குலத்தில் தனி விளக்காய் இலங்குகையில், அவர்க்குத் திரு மணம் நிகழ்த்த அவர் தாய், தந்தையர் விருப்புற்றனர். திருமணம் என்பது, இவ்வுலகில் பிறந்த ஆடவரும், மக ளிரும் இல்லற வாழ்வை இனிது நடத்த, ஒத்த அன்பும், ஒத்த அழகும், ஒத்த குணமும், ஒத்த மனமும் உடையவ ராய மணமகனும், மணமகளும் வதுவை புரிதல் என நாம் அறிவோம். ஆகவே, ஒவ்வோர் ஆடவனும், ஒவ்வொரு பெண்மணியும் திருமணநாளைத் தம் வாழ்க்கையின் தலை சிறந்த, நன்னாளாகக் கருதுதல் மரபு.

எனினும், அக்கால மணம் அவ்வாறு நினைக்க இட மில்லாதிருந்தது. ஏனெனில், அது காதல் மணமாக இல் லாத குறையே. வேளாண் குலத்தாருள் திருமணம் குறைந்தது மூன்று நாட்களாகிலும் நிகழும். அம்மூன்று நாட்களினும் சுவைமிக்க பண்டங்களுடன் உற்றார் உற வினருக்கு நல்விருந்து வழங்கப்படும். ஆனால், மணம் புரிகின்ற ஆண்மகனுக்கும், பெண்மணிக்கும் மாத்திரம் பண்டங்களிலும், மணத்தின் பற்பல முழக்கங்களிலும், நிகழ்ச்சிகளிலும் மனம் செல்லாது. ஒரு ஆடவன் தன் விருப்பிற்கும், மனப்பான்மைக்கும் ஏற்ற மணமகள் வாய்ப்பாளோ என்றுதான் ஆழ்ந்த எண்ணத்துடன் கவலைப்பட்டிருப்பான். ஒரு பெண்மணியும் அவ்வாறே எண்ணுவாள்.

பண்டைக் காலத்தில் தமிழர் திருமணம் ஓர் ஆண் மகனுக்கும் ஒரு பாவைக்கும் காதல் நிகழ்ந்த பின்னரே நடந்தது. அது உண்மையில் பேரின்பத்தையுடைய திரு மணமாகத்தான் விளங்கியது. ஆனல் சிற்சில ஆடவர்கள்

கள்ள உள்ளமும், பொய்ம்மையும் பெற்றுக் காதலித்த காரிகைகளைப் பின்னர் மணம்புரியாமல் கைவிட்டனர். ஆதலால், அநேக பெண்மணிகளின் நிலைமை பெரிய துன்பத்திற்கு இடமாயிற்று. அக்காரணம் பற்றி ஆண் மக்களைக் கட்டுப்படுத்த தற்போதுள்ள திருமணமுறை தோன்றலாயிற்று. மணமகன் மணமகளிடம் உண்மை அன்பு செலுத்தி, அவளை இனிது காப்பாற்ற வேண்டும் என்ற உறுதிகளைத் திருமணநாளில் அவனிடம் பெறுவதற்குப் பல சடங்குகள் ஏற்பட்டன. திருமணத்தில் உற்றார், உறவினர், நண்பர்கள், பெரியோர்கள், கடவுள் ஆகிய இன்னோர் முன், மணமகன் மணமகளைத் தன் உயிரைப்போல் இல்லறத்தில் பாதுகாப்பதாக பற்பல சடங்குகள் மூலமாகப் பல்லோர் அறிய உறுதிகள் அவனிடம் வாங்கப்படுகின்றன. இம்முறைதான் இப்போது நடைபெறுகிறது. இதைத்தான் தொல்காப்பியத்தில்,

> "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரண மென்ப."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், ஆண்மகனைக் கட்டுப்படுத்துகின்ற முறையில் நிகழ்ந்துவரும் திருமணம் பிற்காலத்தில் பற்பல இடர்ப்பாடுகளையும் ஆண்பாலார், பெண்பாலார் இருவர்க்கும் கொண்டுவந்துவிட்டது. பெற்றோர்களின் அறியாமை மிகுதியால் பல ஆண்மக்களும், பெண்மக்களும் திருமணக் கட்டுப்பாட்டால் இல்லற வாழ்வில் எல்லையில்லாத் துன்பங்கள் அடையவும் நேர்ந்துவிட்டது. நம் செல்வக் கேசவர் பெண்ணையே மணந்தார். எனினும், மனம் பொருந்காத திருமணத்தில் அகப்பட்டுக் கொள்ளவில்லை.

செல்வக் கேசவர் மணமக்களைத் திருமணத்தில் கண் குளிரக் கண்டபோது களிபேருவகை எய்தினார். தாம் கல்

வியிற் சிறந்து, பட்டம் பெற்றுத் திகழ்வதற்கு ஏற்ப, அழகு மிகுந்த—பண்பிற் சிறந்த ஒரு பெண்ணரசியே தம் இல்லரசியாக வாய்த்தாளென்றறிந்தார். வேதவல்லி யென்னும் அவ்வம்மையார் இல்லறத்திற்குரிய எல்லா நலனும் பெற்று விளங்கினார்; தம் கணவரைக் கடவுளாகக் கருதினார்.

செல்வக்கேசவரின் செழுந்திரு மனைவியார் இல்லறத்தின் மாண்புகளை இயற்கையிலேயே உணர்ந்திருந்தார். ஆகவே, முதலியார் கருத்தொருமித்த காதலியாரின் இன்பத்தையும், தமது கல்விநிறைவின் இன்பத்தையும், ஒருங்கு நுகர்ந்து இல்லறம் நிகழ்த்தினார். அவர் திருமனையில் என்றும் நல்விருந்தும், அன்புள்ள நிகழ்ச்சிகளுந்தான் நடைபெறும். நல்லவர்களும், கற்றவர்களும் அவர் இல்லத்தில் நல்விருந் தருந்தினர். ஏழைகளும், எளியோர்களும் அவர் மனைவியார் வள்ளன்மைக் குணத்தால் வேண்டிய அளவு திருவமுது பெற்று மகிழ்ந்தனர்.

**மக்கட்பேறு :**

இங்ஙனம் இனிது இல்லறம் நிகழ்த்திய நம் முதலியாரும், அவர் தம் அருமை மனைவியாரும், தங்கள் நற்குண நற்செய்கைகளின் பயனாக, அருமை மிக்க, அறிவு சான்ற, ஆண்மக்கள் மூவரைப் பெற்று மகிழ்ந்தனர்.

> “ மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலன் நன்மக்கட் பேறு.”

என்ற திருக்குறளின்படி அருமை மிக்க நம் முதலியாரும் அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் நற்குண, நற்செய்கைகளின் அணிகலமாக நல்ல புதல்வர்களைப் பெற்றுப் பெருமகிழ்ச்சியை அடைந்தனர்.

முதலியார் தம் மைந்தர்கள் தமிழறிவை ஆங்கில அறிவினும் சிறக்கப்பெற்றுப் பாராட்டுப் பெறவேண்டு

மென்றும் விரும்பினார். அவர் உள்ளத்தில் எப்போதும் தமிழாசையே தழைத்திருந்ததால், பண்டைக்காலத்துத் தமிழ்ப்புலவர்கள் மீதும் பேரன்பும், பெருமதிப்பும் கொண்டிருந்தார். தம் மைந்தர்களுக்குத் தக்கவாறு கல்வியறிவு அளிக்க விரும்பியதோடு நில்லாமல், நம் முதலியார் முற்காலத்துத் தமிழ்ப்புலவர்க ளிடத்தில் கொண்டிருந்த மதிப்பை வெளிப்படுத்தவும் விரும்பினார். அவர் வைணவமதத்தைச் சார்ந்தவராதலால், இராமபிரா னிடத்தில் அளவில்லா அன்புடையவர். சமயப்பற்று என்பதை அவர் சிறப்பாகவே கருதியவர். ஆனால், பிற மதங்களின்மீது குறைகூறி, இழிவு பேசுபவர் அல்லர்.

நம் முதலியார் வைணவப் பற்று மிகுதியாகப் பெற் றிருந்தும், தம் மதத்தின் சார்பாகவும், கடவுளின் சார் பாகவும் வழங்கப்படும் திருப்பெயர்கள் ஒன்றையுமே தம் மைந்தர்கள் ஒருவர்க்கும் வைக்கவில்லை. தாம் தமிழ் மொழியில் கொண்டிருந்த தனிப்பற்றையும், பண்டைத் தமிழ்ப் புலவர்களிடத்தில் தாம் கொண்டிருந்த தனி மதிப் பையும் காட்டுதற்கும், தாம் என்றும் அப்பெயர்களை இட்டு அழைத்து அழைத்துத் தமிழின்பம் பெறுவதற்கும், தம் மைந்தர்கள் மூவர்க்கும் தமிழ் உரையாசிரியர்களாகத் திகழ்ந்த பரிமேலழகர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் என்ற இப்பெரும் புலவர்களின் பெயர்களையே வைத்து மகிழ்ந் தார்! பரிமேலழகர் திருக்குறளுரையாசிரியரென்பதை யும் உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியரும் ஆனைப் பெருமைச் சேனாவரையரும் தொல்காப்பிய உரையாசிரி யர்கள் ஆவர். உறவினரும் நண்பரும் தம் மைந்தர்களை மேற் கூறிய அரும்புலவர்களின் பெயரால் வழங்குவதைச் செவி யினிக்கக்கேட்டு மகிழ்ந்தார்.

## ௯. பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர்

செல்வக்கேசவர் தாம் பிறந்த ஊராகிய திரு மணத்தை விட்டு அகன்று, சென்னையின் ஒரு பகுதியாகத் தற்போது மிளிரும் பிரம்பூரில் இல்லறம் நிகழ்த்துவா ராயினர். இறைவனருளால் அவருக்குச் சொந்த இல்லம் பிரம்பூரில் வாய்த்தது. அது பரந்து அகன்ற மனையாகவும், பின்புறத்திற் பெரிய சோலையை உடையதாகவும் இருந் தது. அத்தகைய சிறந்த மனையகத்தில் மாண்புள்ள மனைவி யோடு மனையறம் நிகழ்த்துகையில், நம் முதலியார் தம் உயர்ந்த கல்விக்கு ஏற்ற ஒரு பதவியைத் தேடவேண்டியவ ரானர். பல நண்பர்களும், உறவினர்களும் அவரை அரசாங்கத் துறையில் பதவியைப் பெறும்படி கூறினர்கள்.

ஆனல், செல்வக் கேசவருக்கு அடிமைத்தொழில் செய்வதில் தினைத்துணையும் விருப்பமில்லை. பெரும் பொருளையும், பெரு மதிப்பையும், ஆடம்பர வாழ்க்கையை யும் அவர் மதிக்கவில்லை. உரிமையுடன் வாழக்கூடிய தொழில் உழவுதொழிலே என்றுதான், திருவள்ளுவர் கருத்தின்படி அவரும் எண்ணினர். ஆனல், அவர், எம். ஏ. பட்டம் பெற்றுத் திகழ்ந்தமையால், ஏனைய வேளாளர்கள் பலர் உழவுதொழிலைக் கைவிட்டதுபோல் அவரும் தமது குலத்திற்குரிய உழவுதொழிலைக் கைவிடவேண்டி யவரானர்.

அதற்கு அடுத்தபடியாகச் சம உரிமையுடன் வாழக் கூடிய தொழில் ஆசிரியர் தொழிலே என்று கருதினர் நம் முதலியார். அத்தொழில் ஒரு வழியில் உழவுதொழி லினும் மேம்பட்டது என்றும் எண்ணினர். ஏனெனில், ஆசிரியர் தொழிலில் நாடோறும் மாணவர்களோடு அன் புடன் அளவளாவவும் கல்வியின்பத்தை அவர்களோடு

நுகரவும் வாய்ப்பு இருக்கிறதென்றும், அதுவே ஒரு கல்விமானுக்கு மனக்களிப்பும் மனவமைதியும் அளிக்க வல்லது என்றும் உறுதியாக எண்ணினார். ஆதலால், செல்வக்கேசவர் பொருளைப் பொருட்படுத்தாமல், புண்ணியத் துறையாகிய ஆசிரியர் துறையையே நண்ணினார். அவர் விரும்பியவண்ணம் அவருக்குச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியர் பதவி எளிதில் கிடைத்தது.

அக்காலத்தில் தமிழன்னை தனக்குரிய பொலிவை ஆங்கில ஆட்சியின் காரணமாக இழந்திருந்தாள் என்று யாவரும் அறிவர். அந்நிலையில் தமிழாசிரியர்களுக்கு அளிக்கப்பட்ட ஊதியம் கொஞ்சமாகவே இருக்கும் என்று கூறவேண்டியதில்லை. தமிழ்ப் பேராசிரியர் என்ற பெரிய பட்டம் நம் முதலியார் பெற்று இருந்தபோதிலும், அவர் திங்கள் ஊதியம் 60 ரூபாய்தான். ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்றுத் தமிழில் முதன்முதலாக எம். ஏ. பட்டம் பெற்ற நம் முதலியாரின் ஊதியத்தைக் குறிப்பிடுவதற்கே மனம் வரவில்லை. எனினும் பேரறிவாளராகிய அவர் சிறிதும் வருந்தவில்லை. அவர் தமிழாசிரியர் ஊழியத்தை மதித்தாரேயன்றி, ஊதியத்தை மதித்தாரில்லை. கல்லூரியின் பிற ஆசிரியர்கள் முந்நூறு நானூறு ரூபாய் வாங்குகிறார்களே என்று அவர்கள்பால் அழுக்காறு கொள்ளவுமில்லை. தமிழ்மொழியை உயர்தர வகுப்புக்களில் மாணவர்கட்குக் கற்பிக்கும் வாய்ப்பைத்தான் மிகப் பெரிதாக நினைத்தார். அவர் மாத்திரம் அக்காலத்தில் பொருளாசை பெற்றிருப்பாரானால், அவர் சிறந்த கல்விக்கு அக்காலத்திலிருந்த வாய்ப்புக்கு அரசாங்கத்திற் பெரும் பதவிகளையெல்லாம் பெற்றிருக்கலாம்; கொழுஞ் செல்வத்தையும் குவித்திருக்கலாம். ஆனால், பொருளாசையை எண்

ளுமல், தமிழ்த்தொண்டையே முதன்மையாகக் கருதித் தமிழாசிரியர் பதவியைப் பெரு மகிழ்ச்சியோடு பச்சையப்பன் கல்லூரியில் ஏற்றுக்கொண்டார். நாளடைவில் அவர் ஆற்றிய தமிழ்த்தொண்டை மதித்தும், தமிழுக்கு ஏற்றந்தர எண்ணியும் ஊதியம் உயர்வுபெற்றது. ஆகவே, முதலியார் திங்களூதியம் 250 ரூபாய் வரையில் வாங்கினர். ஒருபோது அக் கல்லூரியிலேயே ஒரு கூட்டம் நிகழ்ந்தபோது, தமிழ்மொழிக்குப் பொருளிலும் மதிப்புக் காட்டப்பட்டதைக் குறித்து மிகக் களிப்புடன் நம் முதலியார் பச்சையப்பன் கல்லூரியைப் பாராட்டி வியப்பாகப் பேசினர்.

மாணவர்கள் கல்லூரி வகுப்புக்களில் புரியும் குறும்புகளுக்குக் கணக்கேயில்லை. அவர்களில் பெரும்பாலோர் எப். ஏ. வகுப்பை நண்ணியபோதே தங்களைப் பேரறிவாளர்களாகவும், பெரியவர்களாகவும் எண்ணிக்கொள்ளுவது வழக்கம். செல்வந்தர்களின் மைந்தர்களில் சிலர் எப். ஏ. வகுப்பில் சில மாதங்கள் வாசித்தாலே எல்லா மதிப்பும் பெற்றுவிட்டதுபோல் எண்ணுவதும் உண்டு. பெரிய செல்வந்தர் பெண்களை மணக்கச் சில மாணவர்கள் கல்லூரிகளில் சிற்சில மாதங்களே வாசிப்பதும் வழக்கம். கல்வியை வளர்ப்பதற்கும், அறிவை வளர்ப்பதற்கும் கருத்துடன் படிக்கும் மாணவர்கள் சிற்சிலரே இருப்பர். அவர்களும் ஏனைய மாணவர்கள் ஆசிரியர்களிடத்தில் குறும்புகள் செய்தால், தங்களை அறியாமலேயே, அச்சமறியா இளம்பருவத்தின் காரணத்தால், அவர்களோடு கலந்து கொள்வார்கள். மேலும், கல்லூரிகளில் ஒரு வகுப்பில் நூற்றுக்கு மேற்பட்ட மாணவர்கள் ஒன்றுசேர்ந்திருத்தலால், அவர்கள் ஒன்றுசேர்ந்து குழப்பம் நிகழ்த்துகையில் அவ்வகுப்பு எங்ஙனம் ஒளிரும என்று சொல்லவேண்டிய

தில்லை. மேலும், அக்காலத்தில் தமிழ்மொழிக்குத் தகுந்த சிறப்பு மேல்வகுப்புக்களில் இல்லாமையால், தமிழாசிரியர்களுக்கு இன்னல்கள் பல உண்டாதல் இயற்கையாகவே இருந்தது. இத்தகைய நிலைமையைப் பெற்றிருந்த வகுப்புக்களில் நம் முதலியார், தமிழாசிரியராகப் பெருமிதத்துடன் சென்றார்.

இவர் மனத்திட்பம் பெற்றவர்; மாணவர்கள் தமிழறிவைச் செவ்வனம் பெற்றுத் தம்மைப்போல் பிற்காலத்தில் தமிழில் திகழவேண்டுமென்னும் பேராவல் கொண்டவர். மாணவர்களை வயப்படுத்தும் பெருந்திறமை இவர்க்கு இயற்கையிலேயே அமைந்திருந்தது. அவர் எப்போதும் வேடிக்கையாகப் பேசும் இயல்புடையவர்; புன்னகையுடன் தாம் பேசும்போது பல பழமொழிகளைச் சமயத்திற்கேற்றவண்ணம் சொல்லிக் களிப்பிப்பதும் வழக்கம். மாணவர்களுக்குத் தகுந்தாற்போல் நடந்துகொள்ளும் தன்மை அவர்க்கு இருந்தமையால், எவ்வகுப்பு மாணவர்களுக்கும் அவரைக் கண்டபோதே அச்சமுண்டாயிற்று; அன்புமுண்டாயிற்று. நம் முதலியார் கனிந்த உள்ளமும் கண்டிப்பும் வாய்ந்தவர். எந்த மாணவனும் எதிர்மொழி கூறுதலையும், பாடம் படிக்காமல் வருதலையும் பொறுக்கவேமாட்டார்.

நம் தொல்காப்பியர் கூறியபடி, "மாணவன் வாவென்றால் வரவேண்டும்; இருவென்றால் இருக்கவேண்டும்; பாடம் எடு என்றால் எடுக்கவேண்டும்; சொல் என்றால் சொல்லவேண்டும்; செல் என்றால் செல்லவேண்டும். கற்பிக்கும் பாடத்தை அமுதைப்போல் ஆர்வத்துடன் பருகவேண்டும்; சித்திரப் பாவைபோல் அடங்கவேண்டும்; செவிவாயாகவும், நெஞ்சுகளனாகவும் கேட்ட பொருள்களை உள்ளத்தில் உரமாக வைக்கவேண்டும்," என்று இவ்வாறு

நம் முதலியார் தம் மாணவர்களை நடக்கும்படி செய்தார். இரண்டோர் சமயங்களில் அவரை எதிர்த்த மாணவர்களை அவர் அஞ்சாமல், உயர்ந்த வகுப்புக்கள் என்று பாராட்டாமல், தலைமை ஆசிரியரிடமும் சொல்லாமல், தாமே அவர்களைக் கையாகிய வாளால் தண்டித்திருக்கிறார். அத்தகைய ஊக்கத்தையும், ஆசிரிய உரிமையையும் காட்டிய நம் முதலியாரிடத்தில் எல்லா மாணவர்களும் பெரிதும் அச்சங்கொண்டார்கள். இருப்பினும், அவருடைய உண்மையையும் கனிவையும் உள்ளவாறு அறிந்து, அவரிடத்தில் பேரன்பும் கொண்டார்கள். அவரைத் தமிழ்த் தெய்வமென்றே பின்னர் அவர்கள் மதித்தார்கள். பச்சையப்பன் கல்லூரி பண்ணிய நல்வினையால்தான் செல்வக்கேசவர் அங்குத் தமிழாசிரியராக அமைந்தார் என்றும் எல்லா மாணவர்களும் பேசிக்கொள்வார்கள்.

நம் முதலியார் தமிழ்ப்பாடம் கற்பிக்கையில் வகுப்பில் இன்பத்தேன் பாயும். அவர் தமிழிலுள்ள பற்பல நயங்களை வெகு தெளிவாகவும், உரமாகவும், நகைச்சுவை கலந்து மாணவர்களுக்கு ஊட்டுவார். ஆங்கிலப் புலமையும் பெற்றவராதலால், தமிழ்நூலாசிரியர்களின் கருத்துக்களோடு ஆங்கில நூலாசிரியர்களின் கருத்துக்களையும் ஒப்பிட்டுக்காட்டி, மாணவர்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் மலரவைப்பார். அடிக்கடி ஷேக்ஸ்பியர், மில்டன், ஜான்சன், டெனிசன் முதலிய ஆங்கிலப் புலவர்களின் அருமைப் பாக்களின் நயங்களையும் தெரித்துக்காட்டுவார். திருக்குறள், கம்பராமாயணம், சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் உள்ள அருமை நயங்களையும் அவ்வப்போது அளந்து காட்டுவார்.

அக்காலத்தில் தமிழ்ச் சங்கங்களே சென்னைநகரில் மிகவும் குறைவாக இருந்தன. கல்லூரிகளில் ஆங்கிலச்

சங்கங்கள் இருந்தனவேயன்றித் தமிழ்ச் சங்கங்கள் இல்லை யென்றே கூறலாம். நம் செல்வக்கேசவர் தம் கல்லூரியில் தமிழ்மாணவர்சங்கத்தையும் நிறுவும்படி மாணவர்களுக்கு ஆர்வம் ஊட்டினர். அவர் சொல்லுக்கு எளிதில் வயப் பட்ட மாணவர்கள் ஒரு சங்கத்தை நிறுவி, மாணவர்களைச் சொற்பொழிவாற்றவும், பற்பல பொருள்களைப்பற்றித் தெளிவாகச் சுவைபடப் பேசவும் பழக்கிவந்தனர். அச் சங்கம் அவ்வப்போது கல்விவிருந்தளிக்கும் களிப்பு மிகுந்த சங்கமாகத் திகழ்ந்தது. பச்சையப்பன் கல்லூரி யில் பல மாணவர்கள் தமிழில் அக்காலத்திலேயே தனிப் பற்றுக் கொள்ளுமாறும் செய்தது. அக் கல்லூரியில் தமிழன்னை குடிபுகுந்து, அங்கு உயர்பீடத்தில் அமர்ந்து, ஆட்சிபுரியத் துவங்கினாள். தமிழ்மணம் அக் கல்லூரியில் தனிமணமாகக் கமழ்ந்தமையால், பல மாணவர்கள் தமி ழைத் தனிப்பாடமாகக் கற்கவும் தொடங்கினார்கள்.

ரு. சொல்வன்மை:

ஒருவர் ஒரு மொழியிற் புலமை அடைதல் மிகவும் அருமை; இரு மொழியிற் புலமை பெறுதல் அதனினும் அருமை; மும் மொழியிற் புலமை பூணுதல் அருமை யினும் அருமையே. நம் செல்வக்கேசவர் மும்மொழிப் புலவர். ஆங்கிலமும் தமிழுமேயன்றி, மலையாளமும் நன்கு பயின்றவர்.

வகுப்புக்களில் சமயம் நேர்ந்துழி மலையாளத்திலும் உள்ள சில பொருள்நயங்களைத் தெளிவாக மாணவர் களுக்கு எடுத்துக் கூறுவார். தம்மிடம் கல்விபயின்ற, தனிப்பற்றுக்கொண்ட, சில மாணவர்களைப் பன்மொழிகள் கற்குமாறும் ஊக்கம் அளித்தனர். பன்மொழிப் புலமை யால் உண்டாகும் இணையிலாப் பயன்களையும் வற்புறுத்

திக் கூறுவார். அவருடைய அறிவுரைகொண்ட மாண வர் சிலர் பன்மொழிப் புலவர்களாகவும் திகழ்வாராயினர். அத்தகைய மாணவர்களில் தற்போது உயர்திருவாளர், தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் எம். ஏ. பி. எல். அவர்களைக் குறிப்பிடலாம். சென்னையிலுள்ள சிந்தா திரிப்பேட்டையில், பற்பல சிறப்புக்களுடனும், பெரும் புகழுடனும் வாழ்ந்துவருகின்ற அவர், அருங்கலை விநோத ராக இன்னும் பன்மொழிகளைக் கற்றவண்ணமாகவும், களித்தவண்ணமாகவும் விளங்குவதை யாவரும் அறிவர். அவர் தமிழ் மாணவர்களுக்கு நற்கலை பயிற்றியும், நூல் களும் கட்டுரைகளும் எழுதியும் தமிழ்ப்பணி புரிவதை ஈண்டு விளக்கவேண்டுவதில்லை. தமிழில் பெரும்புலமை யும், தற்போதுள்ள பல மாண்புறு பட்டங்களையும் பெற்று ஒளிர்கின்றார். தமிழ்ப் பேராசிரியர் சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளராகிய, பெரும்புகழ் பெற்றுவரும், நம் ஆர். பி. சேதுப்பிள்ளை பி. ஏ. பி. எல். அவர்களும், நம் முதலியாரின் மாணவரே.

சொற்பொழிவு :

செல்வக்கேசவர் ஆங்கிலத்திலும் சொற்பொழிவு செய் வார்; தமிழிலும் செய்வார்; மலையாளத்திலும் பொருள் பொதிந்த இனியசொற்பொழிவுகள் செய்வார். நகைச்சுவை கலந்து, மெய்ப்பாடு விளங்க அவர் பேசுவதை யாவரும் இனிதே கேட்டு மகிழ்வர். நீண்டநேரம் பேசும் பழக்கம் அவரிடத்தில் இல்லை. வெற்றுரையும், பொருளில்லாச் சொல்லடுக்கும், ஒன்றைவிட்டு ஒன்று பேசும் தன்மையும், அவர் சொற்பொழிவில் தலைகாட்டா.

சு. பல்கலைக் கழகத் தமிழ்த் தேர்வாளர் :

நம் முதலியார் தமிழ்நடை கடினமாக ஒரு தனி வகையில் எழுதும் தன்மை உடையவர். அவர் வினாக்

களும் கடினமாகவே காணப்படும். ஆனால், அவர் மாண வர்கள் மனத்தில் மயக்கங்கொள்ளக்கூடிய வகையில் வினாக்கள் தொடுக்கமாட்டார். உயர்தரக் கல்விக்கு ஏற்பக் கடினமொழிகள் இருப்பினும், அறிவு சான்ற, தெளிவுமிகுந்த வகையில்தான் அவர் வினாக்கள் மிளிரும். பல்கலைக் கழகப் பெரிய பட்டங்களுக்கெல்லாம் தமிழ்த் தேர்வாளராகப் பல்லாண்டுகள் நியமிக்கப்பட்டார். தமிழ் மொழியின் மணமும், நயமும் அக்கேள்விகளிலும் கலந்து திகழும். அளவுக்கு மேற்பட்ட வினாக்களையும் தொடுக் காமல், மாணவர் நிலைக்கு மேற்பட்ட நிலைகளில் நின்று தேர்வு செய்யாமல், தமிழ்ப்பாடங்களை ஒழுங்காக ஓதிய எத்தகைய மாணவனும், நல்ல குறியீடுகள் வாங்கும்படி வினாக்கள் கொடுத்து மாணாக்கர்களை மேல்நிலைக்குக் கொண்டுவந்தார்.

---

## ௪. உரைநடை வளர்ச்சிக்கு வழிகாட்டியவர்

உரைநடைவளனை வளர்த்தவர் என்ற துறையில் செல்வக்கேசவர் எவ்வாறு இடம் பெறுகிறார் என்பதை ஆராயுமுன், தமிழ் உரைநடை வரலாறு பற்றிச் சிறிது கூறுவோம். சங்ககாலம் தொடங்கித் தமிழ்நூல்கள் எல்லாம் செய்யுள் வடிவாகவே இருந்தன. இச் செய்யுட்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப்பட்டன. முந்தையோர் எதுகை மோனைச் சந்தங்களுடன் செவியினிமை பெற, ஓசை நயம்உற, செய்யுட்கள் எழுதி வந்தனர். ஆயினும், அவை படிப் போர்க்கு ஐயப்பாடு விளைவித்தமையால், பிற்காலத்தவர் அவைகட்கு உரைகாண நேர்ந்தது. அவ்வாறு தோன்றிய **இளம் பூரணர், நச்சினர்க்கினியர், சேனவரையர்** முதலியோர் உரைகளே தமிழில் முதன்முதல் உரைநடையில் தோன்றியவைகளாம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் சைனர்களின் ஸ்ரீ புராணமும், வைணவர்களின் வியாக்யானங்களும் உரைநடையில் எழுதப்பட்டன. இவை தமிழ்நூல்கள் என்று பெயரளவில் கூறப்பட்டனவேயன்றி, இவற்றின் சொற்கள் முழுவதும் வடசொற்களே. இந்நடையை மணிப்பிரவாளம் எனப் பெயரிட்டனர்.

தற்காலத்திலுள்ள உரைநடைக்குக் கடைக்காலிட்டவர்கள் கிறித்தவப் பாதிரிமார்களே. ஆங்கிலத்தில் உரைநடை வளங்கண்ட மேல்நாட்டுப் பாதிரிமார் இங்கு வந்து, தமிழ் கற்றுத் தமிழ்மொழியில் எளிய உரைநடையில் தம் மதத்தைப் பரவச்செய்ய, நூல்கள் எழுதத் தொடங்கினர். இது பதினேழாம் நூற்றாண்டின் நிகழ்ச்சி. பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வீரமாமுனிவர், அவிவேக

பூரணகுரு என்னும் கதையை உரைநடையில் எழுதினார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தாண்டவ ராய முதலியார் முதலிய சிலர் உரைநடையில் சில நூல்கள் யாத்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆறுமுக நாவலர், வீராசாமி ரெட்டியார், வேதநாயகம் பிள்ளை, இராமலிங்க சுவாமிகள், தொழூவூர் வேலாயுத முதலியார் ஆகிய இவர்கள் சிலநூல்கள் உரைநடையில் எழுதினர். ஆயினும், தமிழின் உரைநடை மலிந்து பொலிவுற்று விளங்குவது இந்த இருபதாம் நூற்றாண்டில் தான் என்று உறுதியாகக் கூறலாம். இதழாசிரியர்களும், மறுமலர்ச்சி எழுத்தாளர்களும் புதுப் புதுத் துறைகளில் பலவகைப்பட்ட நூல்களைத் தற்போது உரைநடையில் வெளியிட்டு வருகின்றனர். இவ்வுரைநடைத் தோற்றத்தின் தொடக்க காலத்தவர் நம் செல்வக் கேசவராயர்.

நம் முதலியார் மதிப்புள்ள அழகான உரைநடையைக் கைப்பற்றிச் சுமார் இருபது நூல்களுக்குமேல் மிக அழகாகவும், தெளிவாகவும், பொருள் பொதியவும் எழுதியுள்ளார். அவற்றைப் படிப்போர் நம் முதலியார் தாம் கருதுகின்ற உண்மைகளை ஏனையோர் மனவேறுபாடு களுக்கு அஞ்சாது எழுதுபவர் என்றும், கருத்தின் செறிவை உள்ளவாறே காட்டவல்லவர் என்றும், நல்ல நூல் அறிவோடு உலகியலறிவும் நிரம்பப்பெற்றவரென் றும், பற்பல பழமொழிகளையும் ஆர்வத்தோடு கற்றுப் பழக்கத்தில் வழங்கி வந்தவர் என்றும் அறிந்து கொள் வார்கள்.

மற்றும், எடுத்துக்கொண்ட பொருளைப் பல்வேறு பாகுபாடு செய்து ஒவ்வொன்றையும் நன்கு அலசிச் சுவை பட எழுதுவார். 'சுகாதார தருப்பணம்' என்று ஒரு கட் டுரை எழுதியுள்ளார். அதில் சுகம், சுகம் கெட்டவன்

தன்னைக்குத்தானே மருந்து, சுத்தம், வாயுர வாசஸ் தானம், ஜலம், ஆகாரம், தேகம், ஒளி, உழைப்பு, மனோ வாக்குக் காயம், உண்டி, உணவின் அளவு, பானம், உறக் கம், உறக்கத்துக்குரிய காலம், உற்சாகம், வைத்தியம் செய்துகொள்ளல், பழக்கவழக்கம், முடிவு என்று இருபது பிரிவுகள் காட்டியுள்ளனர். இவ்வாறே அவருடைய ஏனைய கட்டுரைகளும் நன்கு விளக்கி எழுதப்பட்டுள்ளன. தாம் எழுதும் கட்டுரைகளில் உலக வழக்கிலுள்ள முதுமொழி களைத் தம் நடையாகவே மேற்கோள் குறியிட்டுத் தங்கு தடையின்றி எழுதும் ஆற்றல் பெற்றவர்.

அவர் கட்டுரைகளிற் செல்வம் என்பதும் ஒன்று. அக் கட்டுரையில் தருமம் என்ற உட்பிரிவில் அவர் கூறியுள்ள பொருள்கள் :

"தானமது விரும்பு, தருமத்துக்குத் தாழ்ச்சி வராது, தருமமே தலைகாக்கும், ஈயார்தேட்டைத் தீயார் கொள்வர், ஈயாதார் வாழ்ந்தென்ன? இண்டஞ்செடி தழைத்தென்ன? பாத்திரமறிந்து பிச்சையிடு, மாறு ஈவார்க்கீதல் பொலிகடன் என்னும் பெயர்த்து, தனக்குக் கண்டு தானம், செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல், பாழாய்ப்போகிறது பசுவின் வாயிலே."

தற்காலத்தில் பள்ளி மாணவர்கட்குப் புத்தகங்களா கவும், பொது வாசகங்களாகவும் பல புத்தகங்கள் தோன்றுகின்றன. நாட்டுவரலாறு திராவிடர்காலம் முதல் 1949-ஆம் ஆண்டு வரையில் அரசர்பின் அரசராகக் கற்பிக்கப்படுகிறது. அங்ஙனம் படிக்கின்ற ஒரு மாணவன் அலெக்சாந்தர், டியூப்ளே, கிளைவ், நெப்போலியன், டோக்ளாக், கஜினி, அக்பர், ஒளரங்கசீப், ரஞ்சித்சிங், கவர்னர் ஜெனரல்கள் முதலிய எத்தகையோரைப் பற்றிப்

படித்தாலும் ஒரே தன்மையாக மனச்சோர்வுதான் அடை கின்றான். அவன் புத்துணர்ச்சியும், மனக் கிளர்ச்சியும், களிப்பும் அடைவதாகத் தெரியவில்லை. ஆனால், நம் செல்வக் கேசவர் "அக்பர்" என்று ஒரு நூல் எழுதியுள் ளார். அதை மாணவரும், மற்றவரும் படிக்க வேண்டியது அவசியமாகும். அதைப் படிப்போர் உள்ளத்தில் நாட்டுப் பற்று பிறக்கும்; அறநெறியில் நிற்க அவர் உள்ளம் அவாவும், உண்மைக்கு உயர்வு உண்டு என்று உணர்வர்; நாட்டுச் சரித்திரத்தில் களிப்புக்கொள்ள அறியாத மாண வனும் சுசப்புள்ளதுபோல் காணப்படும் அக்பர் என்னும் நூலை ஒருமுறை படித்தால், வீரமும், மகிழ்ச்சியும் ஒருங்கே அடைவான்.

உரைநடை எழுத வேண்டியதின் இன்றியமையா மையை வற்புறுத்த அவர் கூறுவது:—

"பிழையின்றி எழுதப் பழகிய மாணாக்கன் சிறியன் ஆயினும், அவனைப் பாதி அளவு புலவன் என்றே கொள்ள லாம். இது செய்ய இயலாதவர்கள் பாடவல்ல பாவலரே னும், சொற்பொழி வாற்றவல்ல நாவலரேனும் அவர்கள் இன்னும் ஒரு முறை பள்ளிக்கூடம் போகற் பாலரே."

மேற்கூறிய மொழிகளானவை, உரைநடையைப் புலவர் களும் ஒழுங்காக எழுத வேண்டும் என்று செல்வக்கேசவர் எங்ஙனம் வற்புறுத்துகிறார் என்று நன்கு விளக்கு கின்றன.

தமிழ்மொழியில் ஆராய்ச்சி நூல்கள் இல்லை என்றே கூறலாம். ஆராய்ச்சிகள் செய்து பல நூல்களை ஆங்கில மக்கள் அவ்வப்போது எழுதித் தங்கள் தேச மக்களுக்கு நலம் புரிந்தார்கள். அவர்கள் ஆராய்ச்சிநூல் எழுதுகிற வர்களுக்குத் தனி மதிப்பும் கொடுத்து வந்தார்கள். இத்

தகைய நூல்கள் ஒவ்வொரு மொழியிலும் தோன்ற வேண்டும். நம் தமிழ்மொழியில் ஆராய்ச்சி உணர்ச்சியையே முதன் முதலாகக் காட்டியவர் நம் செல்வக்கேசவர் என்றே கூறலாம்.

கம்பர், தமிழ், திருவள்ளுவர் முதலிய சிறு நூல்களை நம் முதலியார் ஆராய்ச்சித் துறையின் அருமைகள் விளங்குமாறு எழுதியுள்ளார். அவர் எழுதிய கம்பர் ஒரு தேன்கூடு. கம்பரைப்பற்றிய ஆராய்ச்சி, அழகு, சிறப்பு, அறிவு மூன்றும் செறிந்து தோன்றுகின்றது. இலக்கிய அறிஞர்களுக்கு அது நல் விருந்து. "கற்பனை வருணனைகளில் கம்பர், மில்டனுக்குப் பின் இடார்; ஆதிகவியான ஹோமருக்கு எந்த விதத்தும் இளைத்தவர் அல்லர்; புலமையில் ஷேக்ஸ்பியருக்கு ஒத்தவர் என்று கம்பரைப்பற்றிச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

நம் தமிழ்மொழி சிவபெருமானால் தோற்றுவிக்கப் பட்டு, முருகப்பெருமான் வாயிலாக அகத்தியருக்குக் கற்பிக்கப்பட்டு, அகத்தியரால் வளர்க்கப்பட்டு வந்தது என்று நம் புராணங்கள் கூறும். இது புராணங்களின் கற்பனையேயன்றி, உண்மையாகாது என்று நம் செல்வக் கேசவர் எவர்க்கும் அஞ்சாமல் சொல்ல முன்வந்தார். அவர், "ஈதெல்லாம் புராண கற்பிதம். ஒரு பாஷையை ஒருவர் தாமே உண்டாக்கினாரென்பது பாஷா தத்துவ சாஸ்திரத்திற்கு முற்றும் முரண்பாடாகும். கடவுள் தன்மையை ஒருவனுக்கு ஏற்றி, அவன் தானாக ஒரு பாஷையை உண்டாக்கி, இலக்கிய இலக்கணங்களை வரையறுத்து, அவற்றைப் பிறரும் பயிலச் செய்தான் என்பது பிரகிருதி விரோதமான அசம்பாவிதமேயாகும்," என்று தாம் கண்ட உண்மையைத் துணிந்து எழுதினார். உண்மை

யைத்தான் நம் தமிழர் அறியவேண்டும் என்பதும், எல்லாச் சிறப்புக்களையும் ஒருங்கே பெற்ற நம் தமிழ் மொழிக்குத் தெய்வமாட்சியைப் புனையவேண்டிய அவசிய மில்லை என்பதும் அவர் கருத்தாகும். ஆதலால், ஆராய்ச்சி நூலாசிரியராக வருபவர் எவரும், நுணுக்கமாக எப்பொருளையும் ஆராய்ந்து உண்மையைத்தான் புலப்படுத்த வேண்டுமென்றும் அவர் விரும்பினர்.

அவர் சங்கநூல்கள் சிலவற்றில் வந்துள்ள வடசொற்களை எண்ணி அறுதியிட்டுச் சதவிகிதம் குறிப்பிட்டிருக்கின்றார். ஔவையார் பாடலில் நூற்றுக்கு எட்டு, குறுந்தொகையில் நூற்றுக்கு நான்கு வடசொற்கள் வந்துள்ளன என்றனர். திரிகடுகத்தில் இருபத்தைந்து வடசொற்கள் என்றும், நான்மணிக் கடிகையில் இருபது வடசொற்கள் என்றும், திருக்குறளில் அதிகாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு வடசொற்கள் என்றும் குறிப்பிடுகின்றார். நாலடியாரில் ஐந்து பாட்டிற்கு ஒன்று வடசொல் என்றும், கல்லாடத்தில் பாட்டுக்கு ஐந்து என்றும், பத்துப் பாட்டுக்கு ஐந்து என்றும் கணக்கிட்டுக் காட்டுகின்றார். இத்தகைய கணக்கு நம் முதலியார் எடுத்ததிலிருந்து அவர் ஆராய்ச்சித் துறையில் எத்தகைய விருப்பம் கொண்டிருந்தார் என்று நன்கு விளங்கும்.

இன்னும் சில மக்கள் தமிழ் அருமையையும், தனிமையையும், தொன்மையையும், அறியாது மயங்குகின்றனர். வடமொழியின் கலப்பு இல்லாமல் தமிழ்மொழி தனித்து இயங்க இயலாதென்று சொல்லுகின்றவர்களும் சிலர் உண்டு. அது பெரும்பேதைமையே என்றும், அறிவுடைமை ஆகாது என்றும் நம் முதலியார் பன்முறை கூறியிருக்கின்றார். ஒரு சமயம் வடமொழியைத் தழுவாத தமிழ்

நூலுண்டோ என்று ஒரு வினு எழுந்தது. அதைப் பொறுக்க மாட்டாதவராய், நம் முதலியார் அதற்கு விடையாகப் பின்வருமாறு எழுதியுள்ளார்.

"முன்னிட்ட காலைப் பின் வாங்காமல் நாமாயினும் அன்னார் கூறுகின்றதனை வெட்டிப் பேசப் புகுந்து இயன்றன கூறிக் காண்போம். முதலிடைச் சங்கம் இருந்த மதுரையும், கபாடபுரமும் கடல் கொள்ளப்பட்ட ஞான்று வழிவழிப் பெயரும் மாள— அந்தோ! வாரணம் வாரிக் கொண்ட ஏரணமுருவம் யோகம்—இசைக்கணக் கிரதம் சாலம்—தாரணமறமே சந்தம், தம்ப நீர் நிலம் உலோகம் —மாரணம் பொருள் என்றின்ன மான நூல் யாவும் போக —மகம்மதிய மன்னர் தீக் கடவுளையே ஏவித் தீர்த்த பனுவல்கள் பலவும் கழிய—இராமபாணங்கள் துளைத்துச் செல்லரித்த பண்டை நூல்கள் யாவும் ஒழிய—இருந்த விடம் தெரியாது உக்குதல் மக்குதலான கிரந்தங்கள் பலவும் நீங்க—இந்நாள் காறும் எஞ்சி நின்றவற்றை ஒருசார் உசாவுவோம்," என்று வீராப்புடன் துவங்கித் தமிழ் நூல்களின் வரலாறுகளை அறிவித்திருக்கின்றார். இவை போன்றன எல்லாம் அவரின் ஆழ்ந்த தமிழ்ப்பற்றினையும், முற்றிய தமிழறிவையும் வெளிப்படுத்துகின்றன. 'தமிழுக்கே உரிய சிறப்புகள்' என்ற தலைப்பில் தனிமொழி என நன்கு வற்புறுத்திக் கூறுகிறார்.

ஆங்கிலத்தோடு தமிழை ஒப்பிட்டு அது பெறாத சில சிறப்புகள் தமிழ் பெற்றுள்ளது என்றும் விளக்கியுள்ளார் நம் முதலியார். முறைப் பெயர்கள், எதிர்மறை வினைமுற்று, வினையெச்சப் பெயரெச்சத் தொடர்கள் இவை தமிழில் ஒன்றிரண்டு சொற்களில் அமைந்திருக்க, ஆங்கிலத்தில் இவை வாக்கியமாகின்றன என்றும் நன்கு விளக்கித் தமிழின் பெருமையை நிலைநாட்டி யிருக்கின்றார்.

அவர் இயற்றிய நூல்கள், கம்பநாடர், தமிழ், தமிழ் வியாசங்கள், வியாசமஞ்சரி, அக்பர், கண்ணகி கதை, அபிநவகதைகள், கலிங்கத்துப்பரணி, திருவள்ளுவர், ராபின்சன் குரூசோ, மாதகோவிந்தரானடே, பஞ்சலட்சணம் முதலியவைகளாம். அவைகள் ஒவ்வொன்றிலும் பற்பல பொருள் நயங்களும், அறிவின் நுணுக்கங்களும் செறிந்து கிடக்கும். அவைகளை அனைவரும் படித்து நல்லின்பம் பெறுவார்களாக.

நம் செல்வக்கேசவர் தாமே மேற்கூறிய நூல்கள் யாவும் யாத்ததுமன்றி, நம் பண்டைய தமிழ்நூல்களில் சிலவற்றையும் செவ்வனம் ஆய்ந்து, நல்ல பதிப்பில் அழகுறத் தாமே பதிப்பித்திருக்கின்றார். அவை ஆசாரக்கோவை, பழமொழி, அறநெறிச்சாரம், முதுமொழிக்காஞ்சி, அரிச்சந்திர புராணம், குசேலோபாக்கியானச் சுருக்கம் முதலியனவாம்.

---

## ரு. நற்பண்புகள்

செல்வக்கேசவரின் குணங்கள் மிகச் சிறந்தன என்று சொல்ல வேண்டியதில்லை. அவர் உயர்ந்த கல்வி. அறிவு ஆங்கிலத்திலும், தமிழிலும், மலையாளத்திலும் பெற்றுப் பெரும் புகழ் பெற்றபோதிலும், தம்மை உயர்ந்தவராக எண்ணிச் செருக்குற்றதேயில்லை திருவள்ளுவர் கூறிய,

> "பணியுமா மென்றும் பெருமை; சிறுமை
> அணியுமாந் தன்னை வியந்து."

என்னும் திருக்குறளுக்கு ஒரு இலக்கியமாகவும் நம் முதலியார் இருந்தார் என்று கூறலாம். அவர் தம்மைப் புகழ்ந்து பேசிக்கொள்ளும் வழக்கமேயில்லை. எல்லோரிடத்திலும் அன்பாகவும், நயமாகவுந்தான் ஒவ்வொரு செயலிலும் நடந்து கொள்வார். அவரிடத்தில் ஆணவமும், அழுக்காறும் தலைகாட்டமாட்டா. பிறர்க்குப் பல அறிவுரைகள் கூறிவிட்டுத் தாம் மாத்திரம் அறநெறி வழுவி நடக்கின்ற பண்பு அவரிடத்தில் இல்லை. பிறர்க்குத் தாம் எவ்வித நல்லறிவைப் புகட்டுகின்றாரோ அவ்வழியில்தான் தாமும் நடப்பர்.

தாம் பேராசிரியரா யிருந்து, பல அறநெறிகளை மாணவர்க்கு எடுத்துக் காட்டிப் பிறநெறிகளில் அவர்கள் செல்லாவண்ணம் அறிவுரைகள் வழங்கினர்.

நம் முதலியார் அன்பு, அறம், வாய்மை, தூய்மை, பணிவு முதலிய நற்குணங்கள் ஒன்று சேர்ந்த ஓர் ஒழுக்க வடிவே.

---

## கூ. மறைவும், அழியாப் புகழும்

மண்ணில் மக்களாகப் பிறந்தார் அனைவரும் ஒரு நாள் இவ்வுலகை விட்டுப் பிரிந்தே தீரவேண்டும். எத்துணைச் சிறந்த புலவராயினும், கவிஞராயினும், சான்றோராயினும் நிலைபேறுள்ள வாழ்வை வாழ இயலாத உலகம் இது. எத்தனை புலவர்கள் தமிழ்நாட்டில் பிறந்து, பாடல்கள் புனைந்து, மறைந்து போயினர்! சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகளும், திருக்குறள் இயற்றிய திருவள்ளுவரும், தொல்காப்பியம் யாத்த தொல்காப்பியரும் இவ்வுலகை விட்டு மறைந்துதான் போயினர். ஆனால், அவர்கள் யாத்த அளப்பரும் பெருமை வாய்ந்த நூல்கள் நம் தமிழ் நாட்டில் இன்னும் மன்னித் திகழ்கின்றன. எனவே, அந்நூல்களின் ஆசிரியர்களாகிய இளங்கோவடிகளும், திருவள்ளுவரும், தொல்காப்பியரும் பருவுடல்கள் நீங்கப் பெற்றாலும், புகழ் உடல்கள் வாயிலாக நம் தமிழ் நாட்டில் இன்னும் நின்று நிலவுகின்றனர் அல்லவா? இத்தகைய சிறப்புகள் பெற்ற இன்னும் பல அரும்பெரும் புலவர்களும் தங்கள் நூல்களின் வாயிலாகத் தமிழுலகில் புகழ் உடலோடு இலங்குகின்றனர். புலவர்களுக்குள்ள பெருமையும், புகழும், புவியை ஆளும் மன்னர்க்கும் இல்லை. இவ்வுலகில் பல மன்னர்கள் பிறந்து, இருந்து, மறைந்தனர். கணக்கற்ற மன்னர்கள் அங்ஙனம் மறைந்து போனதும், அவர்கள் பேர்களும் அவர்களோடே மறைந்தன. ஆனால், கம்பர் பெயரும், சேக்கிழார் பெயரும், திருவள்ளுவர் பெயரும், இன்னோர் அன்ன புலவர் பெருந்தகைகளின் பெயர்கள் மறைந்தனவா? ஷேக்ஸ்பியர் பெயரும், மில்டன் பெயரும், டென்னிசன் பெயரும், இன்னோர் அன்ன ஆங்கிலப் புலவர்களின் பெயர்கள் மறைந்தனவா?

இத் தமிழ்நாடு பலவழிகளில் உண்மைநலத்தை இழந்து வருதல் உண்மையே. எண்ணற்ற பேரறிவாளர்களை நம் தமிழன்னை அகாலத்தில் இழந்திருக்கின்றாள். அந்தோ! இது கொடுமையினும் கொடுமை! நம் சுப்பிரமணிய பாரதியாரும் அகாலத்தில் மறைந்தவரே. இப்போது பாரதியார் இருந்திருந்தால், தமிழன்னை எவ்வளவு மகிழ்ந்திருப்பாள்! மணி. திருநாவுக்கரசையும் தமிழன்னை அகாலத்தில் இழந்தாள். இப்படிப்பட்ட பல புலவர் மணிகளை அகாலத்தில் இழக்கும் வினையை உடையாள் நம் தமிழன்னை என்றுதான் சொல்ல வேண்டும். நம் செல்வக் கேசவரும் தம் ஊனுடலை விட்டுப் புகழுடலைப் பெற்றார். திருவள்ளுவரும் உலக வாழ்வின் நிலையாமையை உன்னி அதன் இயற்கையைப் பெருமைப் படுத்துவதுபோல்,

> "நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
> பெருமை யுடைத்திவ் வுலகு."

என்று கூறியுள்ளார். அஃதாவது, "என்ன கொடுமை! நேற்றிருந்தவர் இன்றில்லை, என்றும் அற்ப வாழ்வை அளிக்கும் உலகம் ஐயா இது!" என்றும் மனம் வருந்திக் கூறியுள்ளார்.

பேராசிரியர்! அருங்குணவள்ளல்! அருமை நூலாசிரியர்! நம் தமிழர்க்கு நல்ல வழிகாட்டி! அந்தோ! அந்தோ! அப்பெரியார் இவ்வுலகில் நெடுங்காலம் வாழவில்லை. தமிழன்னை என்ன பாவம் செய்தனளோ? 1864-ஆம் ஆண்டில் பிறந்தார்; அக்டோபர் மாதம், 2-ஆம் தேதி 1921-ஆம் ஆண்டில் மறைந்தார். எனவே, அவர் தம் ஐம்பத்தேழாவது வயதில் இவ்வுலகை விட்டுத் துண்ணென மறைந்தார்.

நம் பெருந்தகை செல்வக் கேசவர் தமக்கு மரணம் வந்துவிட்டது என்று 1921-ஆம் ஆண்டு, அக்டோபர்

2-ஆம் தேதியின் முன்னமே அறிந்து கொண்டார். ஆனால், அவர் மனம் கலங்கவில்லை; மக்களை விட்டுப் பிரிகின்றோமே என்றும் துன்புறவில்லை. ஐம்பத்தேழு ஆண்டுகள் வரையில் ஆண்டவனருளால் உலகில் வாழ்ந்தது போதும் என்றுதான் எண்ணினார் நம் முதலியார்.

பிரம்பூரில் செல்வக்கேசவர் மறைந்தார் என்ற செய்தியைக் கேட்டதும், பிரம்பூர் மக்களும், சென்னை நகர் மக்களும், மாணவர் கூட்டமும், மாபெரும் புலவர்களும் அவர் மனைக்கு மனம் வருந்திக் கண்ணீர் வடித்து விரைந்தோடினர். "பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியரா மறைந்தார்? நம் பண்டித மணியா மறைந்தது? நம் நல்லறக் கொழுந்தா போயிற்று? நம் தமிழ்த் தந்தையா நீங்கினார்? நம் நல்லாசிரியரா ஏகினார்?" என்று பலவாறு கூறி மனம் வருந்தி, அவர் அருமை உடலைக்கொண்ட மலர்விமானத்தோடு தொடர்ந்து நன்காடு வரையில் சென்றனர். பலவாறாகப் போற்றினர்; புகழ்ந்தனர்; இறுதியில் இறைவன் அருளை நினைந்தனர்; நம் முதலியாரின் நல்ல ஆன்மா அமைதி பெறுக என்று மனத்தில் வேண்டினர்.

நம் செல்வக் கேசவர் மறைந்தாலும், அவர் பெரும் புகழ் மறையவில்லை. பச்சையப்பன் கல்லூரியில் அவர் தனிப்புகழ் இன்றும் நின்று நிலவுகின்றது. மாணவர்க்கு ஆற்றிய தொண்டின் மாட்சி அங்கு இன்னும் புகழப்படுகின்றது. அவர் தமிழில் யாத்த அருமை நூல்களோ அவர் புகழுடலை ஓம்பி வருகின்றன. தமிழுலகில் தலைசிறந்த, புகழ்பெற்ற புலவர் மணிகளில் நம் முதலியாரும் ஒருவரே. அவர் கல்வியின் மாட்சியையும், தமிழ்த் தொண்டின் மாட்சியையும், நூல்களின் மாட்சியையும் தமிழுலகம் என்றும் மறவாது.

# டாக்டர் உ.வே. சாமிநாதையர்.

## ௧. மரபும் பெயரும்

திருமிக்க, ஒளிமிக்க, அழகுமிக்க அருந்தமிழ், பழைய மக்கிய ஏட்டுச் சுவடிகளில் மறைந்து கிடந்தது. அதன் பெருமை எல்லாம் சங்கநூல்களில் தான் மிளிர்கின்றது. சங்கநூல்களில் பல வெளிக்கு வராமல் இருந்த காலத்தில், ஒளி இழந்து இருந்த தமிழ்மொழியை ஒளிபெறச் செய்தவர்; அரும்பாடுபட்டுப் பழைய ஓலைகளைப் பல புலவர்களிடத்துப், மடாதிபதிகளிடத்தும் அரிதில் பெற்றுப் பார்வையிட்டுத் திருத்தங்களெல்லாம் செய்து, அழகான ஏடுகளில் வனப்புடன் சிலப்பதிகாரம் என்றும், சிந்தாமணி என்றும், பத்துப்பாட்டு என்றும், மணிமேகலை என்றும், புறநானூறு என்றும் அளித்தவர்; இப்போது நமக்குத் தமிழ்க் களஞ்சியங்களாக ஒளிர்ந்து, உவகை ஊட்ட வந்துள்ள அந்நூல்களை வெளியிட்டவர்; சங்க நூல்களுக்கு ஒரு புத்துயிர் அளித்த புனிதர்; அண்மையில் சென்னையில் உள்ள திருவட்டீசுரன் பேட்டையில் வாழ்ந்த பெருந்தகை; மாப்பெருந் தமிழ்ப்புலவர்; மஹா மஹோபாத்தியாயர் என்னும் பெரும் பட்டத்தைப் பெற்றவர்; சென்னை மாகாணக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப்புலமை நடாத்திய தக்கோர்; இனிய மொழியும், இளநகையும், அன்பும், கனிவும் மாணவர்களுக்குக் காட்டிய பெருங் குணக்குன்று; அவர் தான் டாக்டர் பட்டம் பெற்ற நம் **சாமிநாதையர்.** அவர் வரலாற்றுச் சுருக்கம் ஈண்டுக் கூறப்படுகிறது.

**தோற்றமும் கல்வியும் :**

இவ்வுலகிற் பண்டைக் கலைகளிலும், கற்பனைகளிலும், அறிவிலும், கடவுள் தன்மையிலும் பெரிதுஞ் சிறந்து விளங்குவது நமது இந்திய நாடு. இஃது உலக முழுவதும் அறிந்த உண்மையே. இந்நாடே சகோதரத்துவத்திலும், சமத்துவத்திலும் நிகரற்று விளங்கும் நாடு; உலகுக் கெல்லாம் சமாதானத்தைக் கற்பிக்கும் நாடு; அன்பை வளர்க்கும் நாடு. இந்நாட்டின் தென்புறமாக ஒளிரும் தமிழ்நாட்டின் சிறப்போ தனிச்சிறப்பு. வற்றாத தீஞ்சுவைத் தண்ணீரையுடைய, அழகில் மிகுந்த காவிரியாறு. நெற் களஞ்சியம் என்னும் நற்பெயர் பூண்ட தஞ்சை ஜில்லாவை வளமைமிக, அழகுமிக, பெருமைமிகச் செய்து வருவதும் நாம் அறிந்ததே.

தென்னாட்டில் மிகச் சிறந்த இடம் காவிரியாறு பாயும் நிலப்பகுதியே. தென்னையும், வாழையும் நிறைந்த சோலை கள் யாண்டும் மிளிரும் சிறப்பைப் பெற்றது அச்சோழ நாடு; வயல்கள் நிறைந்த, நீர்வளம் மிகுந்த நன்னாடாகிய அச்சோழ நாட்டிலுள்ள தஞ்சைமாவட்டத்தில் உத்தம தானபுரம் என்று ஒரு சிற்றூர் உளது. அவ்வூரின்கண், **வேங்கடசுப்பையர்** எனும் பெயரிய பெரியார் ஒருவர் தோன்றினார். அவர் இயற்றமிழ்ப் புலமையும், இசைத் தமிழ்ப் புலமையும் ஒருங்கு பெற்றவர்; ஒழுக்கத்திலும், பத்திநெறியிலும் நல்ல சிறந்தவர்; அன்பர்களிடத்தில் அளவிலா அன்பு கொண்டவர்; கடவுள் நம்பிக்கையை முற்றிலும் பெற்றவர். அப்பெரியார் தாம் பிறந்த சிற்றூரில் இருந்த மக்களை இரு வழிகளில் இன்புறச் செய்தனர். புராணச் சொற்பொழிவில் வல்லுநராக விளங்கிய வேங்கட சுப்பையர் தம் ஊர் மக்களை அவ்வப்போது, பத்தி வெள் ளத்தில் திளைக்கச் செய்தார். புராணத்தை இசைத்தமிழிற்

கலந்து, எல்லா மக்களும் உலகக்கவலையை மறந்து, மௌன நிலையில், தம் செவிகளில் இன்பத் தேன் நுகர்ந்து களிப்புற ஊட்டினர். உடையார்பாளையத்திலும், அரியலூரிலும் அரண்மனையின் இசைப்புலவராக அப்பெரியார் இருந்தனர்.

வேங்கடசுப்பையர் அழகிலும், குணத்திலும், பொறையிலும், பணிவிலும் சிறந்த சரசுவதி அம்மையார் என்னும் மனைக்கொடியை மணந்து வாழ்ந்தார். அவ்வம்மையார் பரம்பரையும் ஐயரவர்களின் பரம்பரையைப்போல் ஒழுக்கத்திலும், அறநெறியிலும், பத்திநெறியிலும் நெடுங்காலமாகச் சிறந்து ஒளிரும் பரம்பரையாகும். அவர் குணமாட்சிக்கு ஏற்ற மனைமாட்சி வேண்டுமல்லவா? அவ்வம்மையார், தம் கொழுநர் கருத்தறிந்து ஒழுகும் சித்திரப்பாவையாக விளங்கினர். அவ்விருவரும் தமிழும் சுவையும் போலவும், மலரும் மணமும் போலவும், உடலும் உயிரும்போலவும் ஒன்றுபட்டு வாழ்ந்தனர்.

அத்தகைய குணமாட்சியோடு பல மாட்சிகளையும் பெற்ற, இல்லறத்தை இனிது நடாத்திய, அவ்விருவரின் நல்வினையே வடிவாக வந்தது ஓர் ஆண் மகவு. அஃது அவர்கள் மனைமாட்சியை இன்னும் மாண்புறச் செய்தது; அவ்வரிய மகவை **1819-ஆம் ஆண்டு**, பிப்பரவரி மாதம் **19ஆம் தேதி**யில் பெற்றெடுத்தனர். உற்றார், உறவினர், ஏனையோர் உவகைக்கடலில் அமிழ்ந்தனர்; ஐயர் அவர்களும், அவர் மனைவியும் எய்திய இன்பத்தை ஏட்டில் எழுத இயலாது. அச் செல்வக்குழவி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, ஐயரவர்களின் மனைமாட்சியின் மங்கலமாக, மாணிக்க விளககுப்போல் திகழ்ந்தது. அதற்குத் தம் குலதெய்வமாகிய சாமிநாதன் என்னும் திருப்பெயரை இட்டனர். முதலில் அதற்கு வேங்கடராமன் என்ற

தம் தகப்பனார் பெயரைத்தான் ஐயர் அவர்கள் சூட்டினார்கள். ஆனால், ஆண்டவன் அருளால், அப்பெயர் நெடுங்காலம் வழங்கப்படாமல், சாமிநாதன் என்ற பெயரே வழங்கலாயிற்று.

சாமிநாதையர் இளம்பருவத்திலேயே தம் தந்தையாரிடம் சிற்சில தமிழ்ப் பாடல்கள் பாடத் தெரிந்துகொண்டார். கூடியவரையில் இசையோடு அப் பாடல்களைப் பாடவும் தம் தந்தையாரிடம் பழகிக் கொண்டார். தந்தையார் இசைவல்லவராக இருந்தமையால், ஐயர் அவர்களுக்கு இசைச் செல்வமும் ஒரு சிறிது சிறு வயதிலேயே உண்டாயிற்று.

திண்ணைப்பள்ளி.

அக்காலத்தில் கிராமப் பள்ளிக்கூடங்களாக விளங்கியவைகள் பெரும்பாலும் திண்ணைப் பள்ளிக்கூடங்களேயாகும்.

அப்பள்ளிக்குப் பல ஆசிரியர்கள் தேவையில்லை, ஒரே ஆசிரியர்தான் பள்ளியை நடத்துவார். பள்ளிக் கட்டடமும் தேவையில்லை; நாற்காலி, மேசை, பெஞ்சு, கரும்பலகை முதலிய பொருள்கள் ஒன்றும் தேவையில்லை. ஆசிரியர் பள்ளியைத் தம் திண்ணையிலேயே, தம் விருப்பின்படி தம் முழு உரிமையுடன் நடத்துவார். ஊரார் அனைவரும் அவரைத்தான் சிறந்த கல்விமான் என்று எண்ணிக் கொள்வார்கள். அவர் எந்தப் பேச்சைப் பேசினாலும் இடையிடையே சிற்சில பாடல்களை மேற்கோளாகச் சொல்லிக்கொண்டே பேசுவார். தமிழ்நெடுங்கணக்கில் மிகவும் வல்லுநராக இருப்பார். அந்தாதி, திருப்புகழ், விவேகசிந்தாமணி, நிகண்டு, கலம்பகம் முதலிய தமிழ் நூல்களை முற்றிலும் மனப்பாடம் செய்திருப்பார். சம்ப

ளம் இவ்வளவுதான் என்று ஒரே தன்மையில் வாங்க மாட்டார். பிள்ளைகளின் நிலைமைக்கு ஏற்பச் சிறுசிறு தொகைதான் வாங்குவார்; ஏழைப் பிள்ளைகளிடத்தில் பணம் வாங்கவே மாட்டார். சில சமயங்களில் அப் பிள்ளைகள் தங்கள் தோட்டத்தில் விளைந்த காய்கறிகளைக் கொண்டுவந்து கொடுப்பார்கள். தீபாவளிப்பண்டிகைக்கும், பொங்கல்பண்டிகைக்கும் சிறிது பச்சரிசியும், பூசணிக்காயும், கொண்டுவந்து கொடுப்பார்கள். அவை களைப் பெற்றுக்கொண்டு பெருமகிழ்ச்சி அடைவார், அத் திண்ணைப் பள்ளி ஆசிரியர்.

ஆசிரியர் பிள்ளைகளிடத்தில் வீட்டுப் பணிகள் எல்லா வற்றையும் அச்சமின்றித் தாராளமாக ஏவிக் கொள்வார். அவரை எவ்விதக் கேள்வியும் கேட்க எத் தாய் தந்தையரும் வரமாட்டார்கள். தங்கள் பிள்ளைகள் படித்து விருத்தி யடையவேண்டும் என்றுதான் ஆசிரியரிடம் சொல்லுவார்கள். பிள்ளைகளின் கண்களை விட்டுவிட்டு, மற்ற எந்தப் பாகத்திலும் அவர்களை நன்றாகத் தண்டிக் கலாம் என்றும் அத் தாய், தந்தையர்கள் சொல்லுவார்கள். ஆசிரியர் இட்டதுதான் திட்டம். அவர் ஆணையை மீறி நடக்கும் மாணவன் ஒருவனும் இரான். ஏனெனில், அவர் ஆணையை மீறும் மாணவனுக்குக் கடுந் தண்டனை கிடைக்கும். பிள்ளைகள் ஆசிரியரைக் கண்டவுடன் நடு நடுங்குவார்கள். அவர் கையில் மிளிரும் கனத்த பிரம் பிற்கு அவரைக் காட்டிலும் அதிகமாக அஞ்சுவார்கள். தவறு செய்த பிள்ளைகளுக்கு வரம்பின்றிப் பிரம்படிகள் விழும். ஒரு பிள்ளை கடுந்தண்டனை அடைவதைப் பார்த்த மற்றப் பிள்ளைகள் தாமே அடங்கி விடுவார்கள்.

ஆசிரியர் மாணவர்களிடத்தில் கண்டிப்பாகவும், கடு மையாகவும் நடந்து கொண்டாலும், உண்மையில் அவர்க

னிடத்தில் அன்பும், கனிவும், பொறுப்பும் உடையவரே. ஒவ்வொரு மாணவனையும் தினந்தினம் ஒழுங்காகக் கவனித்து, அவன் பாடங்களை யெல்லாம் சரியாகக் கேட்பார்; புதிய பாடங்களையும் தினந்தோறும் கற்றுக்கொடுப்பார். திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மனப்பாடம் செய்வதென்பது மிக எளிதான காரியம். எந்த மாணவனும் எந்தச் சிறு நூலையும் முற்றிலும் மனப்பாடம் செய்து விடுவான். திருப்புகழைக் கடைசியாகத்தான் படிப்பான். அதை முற்றிலும் மனப்பாடம் செய்து முடிப்பவன்தான் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் உயர்ந்த தேர்வைப் பெற்றவன் ஆவான். அதற்குள் அவன் தமிழ்க் கணக்கில் மிகவும் கெட்டிக்காரனாய் விடுவான். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்று கூறியபடி, பண்டைய கிராமப் பிள்ளைகள் திண்ணைப் பள்ளிக்கூடங்களிலேயே இலக்கிய அறிவையும், கணக்கறிவையும் ஒருவாறு தங்கள் வாழ்வுக்கு வேண்டிய அளவில் பெற்று விடுவார்கள்.

அவர்கள் காலையில் ஆறு மணிக்குப் பள்ளிக்குச் செல்லவேண்டும்; மாலை ஆறுமணிக்கு வீட்டிற்குத் திரும்ப வேண்டும். காலை உணவுக்கும், பகல் உணவுக்கும் இடையில் விடுதி பெறுவார்கள். மற்ற வேளைகள் முழுவதும் பள்ளியிலே கல்வியில்தான் கழியும். பள்ளியில் விளையாட்டிற்கு இடமேயில்லை. எந்தப் பிள்ளையும் ஒழுங்கையும், அடக்கத்தையும், பணிவையும் எளிதில் பெற்றுவிடுவான். சோம்பலென்பது அவனிடத்தில் தலைகாட்டாது. அக்காலத்தில் கிராமங்களில் காகிதத்தால் செய்யப்பட்ட புத்தகங்களும் இல்லை; பென்சிலும் இல்லை; பேனாவும் இல்லை. பனை ஓலைச் சுவடிகள்தான் வனப்புள்ள புத்தகங்கள். இரும்பினால் செய்யப்பட்ட கூரிய எழுத்தாணிதான் பேனாவும் பென்சிலுமாகும். ஒவ்வொரு மாணவனும்

அப் பனைஒலையில் எழுத்தாணி கொண்டு எழுதக் கற்றுக் கொள்ள வேண்டும். அங்ஙனம் பனை ஒலையில் மணிபோல் எழுத்துக்கள் விரைவில் எழுத வல்லவனைத்தான் குட்டிப் பண்டிதன் என்று கூப்பிடுவார்கள். கல்வியில் சிறந்த, உருவிலும் சிறந்த, வலுவிலும் சிறந்த ஒரு மாணவன்தான் சட்டாம்பிள்ளை என்ற பட்டத்துடன் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் சிற்சில வேளைகளில் ஆசிரியத் தொழில் செய்வான். அவனும் ஆசிரியரைப்போல் தனியுரிமையாளன் தான். அவனைக் கண்டாலும் மாணவர்கள் நடுங்குவார்கள். திண்ணைப் பள்ளியின் வாழ்க்கை கடுமையாகவும், துன்பமுள்ளதாகவும் இருந்தபோதிலும், உண்மையில் ஒவ்வொரு மாணவனும் நல்ல தமிழறிவும், கணக்கறிவும், பெற்றோரிடத்தில் அன்பும், மற்றோரிடத்திலும் பணிவும், அடக்கமும் கொண்டவனாய்ச், சுறுசுறுப்பும் ஊக்கமும் மிகுந்தவனாய்ப், பிற்காலத்தில் திகழும் வாய்ப்பைப் பெறுவான். இத்தகைய திண்ணைப்பள்ளிக்கூடத்தில் நம் சாமிநாதையர் அவர்களும் சேர்ந்தனர்.

உத்தமதானபுரத்துத் திண்ணைப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் மிகவும் நல்லவர். அவர் கண்டிப்பும், ஒழுங்கும் மிகப் பெரிதும் பெற்றிருந்தபோதிலும், மாணவர்களிடத்தில் கனிவும், அன்பும் உடையவரே. அவருக்கு நம் ஐயர் அவர்களின் தந்தையாரிடத்தில் தனி மதிப்பும், தனி யன்பும், தனியச்சமும் உண்டு. ஏனெனில், நம் ஐயர் அவர்களின் தந்தையார் இயற்றமிழ் அறிவும், இசைத்தமிழறிவும் பெற்றவர் அல்லவா? அத்தகைய பெரியோர் பெற்ற அருமைமைந்தனுக்குத் தாம் ஆசிரியராக இருப்பதை அத் திண்ணைப்பள்ளி ஆசிரியர், தாம் ஆற்றிய பெரிய நல்வினையின் பயனாகவே எண்ணினார். நம் ஐயர் அவர்களின் தந்தையார் சிறந்த கல்விமானாதலால், தம்மைந்தனை

அப்பள்ளிக்கு அனுப்புகையில், அவ்வாசிரியருக்கு நல்ல பரிசும் திருவமுது முதலியனவும் கொடுத்து அவரைச் சிறப்பித்தார். நம் ஐயர் தம் ஆசிரியரைக் கடவுள் என்றே கருதினர். அவர் சொல்லிய பாடங்களைத் தினந்தோறும் செவ்வனே படித்து, ஒழுங்காக ஒப்பித்து வந்தமையால், மற்ற மாணவர்களைப்போல் அவர் ஆசிரியரிடத்தில் அச்சம் கொள்ளவில்லை; அன்பே கொண்டார்; மதிப்பே பூண்டார்; சிறுசிறு நூல்களை எல்லாம் அந்தாதிமுதல் திருப்புகழ் வரையில் மனப்பாடம் பண்ணிவிட்டார். தமிழ் ஒரு இன்பக் களஞ்சியம் என்று அவ்வயதிலேயே கண்டு கொண்டார். தமிழ்ப் பாடல்களின் தனிச்சுவையை நுகர்ந்தார்; எப்போதும் பாடிக்கொண்டே இருக்கும் நல்ல வழக்கத்தையும் கைக்கொண்டார். ஏட்டில் எழுதவும், ஏட்டின் எழுத்துக்களை நன்கு படிக்கவும் செவ்வனே பழகிக்கொண்டார். தமிழ்க் கணக்கில் வல்லவரானர்.

நம் ஐயர் அவர்கள் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்தமையால், பிற்காலத்து வாழ்க்கையில் அவருக்குப் பல நன்மைகள் விளைந்தன. அவைகள் யாவையெனப் பின்னர் விளங்கும். நல்ல தமிழறிவைத் திண்ணைப்பள்ளியிலேயே பெற்றுக்கொண்ட நம் ஐயர் அவர்கள், பின்னர் தம் தந்தையாரிடம் சிற்சில பெரிய நூல்கள் பாடம் கேட்கத் துவங்கினர். எனவே, அவர் தந்தையாரே, அவருடைய இரண்டாவது ஆசிரியர் எனக் கூறலாம். தந்தையார் நல்ல தமிழ்ப்புலமை பெற்றிருந்தமையால், தம் மைந்தனுக்குக் கற்பித்த நூல்களில் செறிந்து கிடந்த திட்ப நுட்பங்களையெல்லாம் தெளிவுற விளக்கினர். தமிழ் இசையும் கூடிய வரையில் அவ்வப்போது இலக்கியத்தோடு கற்பித்து வந்தார். தந்தையாரின் புராணச் சொற்பொழிவையும் நம் ஐயர் அவர்கள் அடிக்கடி கேட்டு வந்தமையால் விரிவுரை செய்

வதிலும் ஆர்வம் கொண்டார்; பாடல்கள் பாடுவதிலும் ஆசை கொண்டார்; தம் தந்தையைப்போல் சைவ ஒழுக்கங்களிலும் விருப்பம் கொண்டார்; தமிழ்மொழியிலோ தனிப்பற்றுக் கொண்டார். இளம் பருவத்திலேயே ஐயருக்குச் சிறந்த தமிழறிவு வந்துவிட்டதால், இன்னும் மேலும் மேலும் தமிழ் நூல்களைப் பற்பல ஆசிரியர்களிடத்தில் முறையாகக் கற்றுப் பெரும் புலவனாக வேண்டுமென்ற எண்ணம் உண்டாய்விட்டது. அவர் தந்தைக்கும் தம் மைந்தன் தமிழுலகில் பெரும் புலவனாகத் திகழவேண்டும் என்ற பேராசை உண்டாயிற்று.

---

## உ. குருகுலமும், சைவமடமும்

பிற ஆசிரியர்கள் :

சாமிநாதையர் அவர்கள் முதலில் திண்ணைப்பள்ளி ஆசிரியரிடத்திலும், பின்னர் தம் தந்தையிடத்திலும் தமிழ்க்கல்வி ஒருவாறு கற்றுக்கொண்டதும், வேறு சில ஆசிரியர்களிடத்திலும் தமிழறிவு முன்னினும் சிறக்கப் பெற்றார். அத்தகைய ஆசிரியர்கள் கற்பித்த தமிழ்நூல்களில், பற்பல புதிய நயங்களைக் கண்டார். தமிழ்ச்சுவை தேனினும், கரும்பினும், கற்கண்டினும் சிறந்த தீஞ்சுவை பெற்றிருத்தலை அறிந்து அச்சுவையைச் சிறிது சிறிதாக நுகர்ந்தனர். சடகோபய்யங்கார், வேலாயுதபண்டாரம், சிதம்பரம் பிள்ளை, விருத்தாசல ரெட்டியார் முதலிய தமிழ்ப்புலவர்கள் அத்தகைய ஆசிரியர்களில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவர்கள். நம் ஐயர் தம் பதினேழாம் வயது வரையில் இவ்வாறு பல ஆசிரியர்களிடத்தில் பற்பல தமிழ் நூல்கள் பாடம் கேட்டுப் புலமை பெற்று வந்தார். அக்காலத்தில் இப்போதுள்ள தமிழ்ப்பட்டத் தேர்வுகள் இல்லாமையால், தமிழில் பெரும் புலமைபெற ஆசைப்படும் ஒரு மாணவன், பற்பல நூல்களில் தனிப்புலமை பூண்டு விளங்கும் பற்பல ஆசிரியர்களை நாடுவது வழக்கம். சில புலவர்கள் இலக்கியத்தில் மிகச் சிறந்தவர்களாக இலங்குவார்கள். சில புலவர்கள் சங்கநூல்களில் வல்லுநர்களாக விளங்குவார்கள். சில புலவர்கள் பற்பல புராணங்களில் பேரறிவு பெற்று மிளிர்வார்கள். சிற்சில புலவர்கள் இலக்கணக் கடலாகத் தனியறிவு பெற்றுத் திகழ்வார்கள். வேறு சில புலவர்கள் சமய நூல்களில் பேரறிவு பெற்று ஒளிர்வார்கள். எனினும், பொதுவாகத் தமிழ்ப் புலவர்கள் மேற்கூறிய எல்லா நூல்களிலும் ஓர் அளவிற்கு அறிவு பெற்றிருப்பார்கள்.

மகா வித்துவான், மீனாட்சிசுந்தரம் பிள்ளை :

நம் ஐயர் அவர்களுக்கு எல்லோரினும் சிறந்து விளங்கிய பெரும்புலமைபெற்ற திரிசிரபுரம், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களிடம் பாடம்கேட்க வேண்டுமென்ற பேராசை உண்டாயிற்று. செந்தமிழ் நாட்டிலே தமிழ்நூல்கள் எல்லாவற்றிலும் செழும்புலமை பெற்று, ஒப்பு உயர்வு இல்லாத தனிப்பெரும் புலவராகத் திகழ்ந்தவர் மேற்கூறிய பிள்ளை அவர்களே. அவரிடம் பாடம் கேட்கும் மாணவர்களுக்குப் பெரு மதிப்பு உண்டு. அவர்களே பெரும் நல்வினையாளர்கள் என்றும் சொல்லப் படுவார்கள். அப்பிள்ளை அவர்கள் திருவாவடுதுறை மடத்து ஆதீனப் புலவராகவும் இருந்து வந்தார். அவர் புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவியிருந்தது. அவரை அறியாத புலவர்களும், வள்ளல்களும் பெரியோர்களும், தமிழ்நாட்டில் இல்லை. அவர் கல்விக்கடல் என்றும், கற்பனைப் பிறப்பிடம் என்றும், தமிழ்க்கடல் மடை திறந்த வெள்ளம் என்றும், நற்குணக் குன்று என்றும், தமிழ்த் தெய்வமென்றும் பற்பலவாறு பாராட்டுப் பெற்றவர். பிள்ளை அவர்கள் அக்காலத்தில் மிகச் சிறப்பாகக் கருதப்பட்ட பற்பல பதிகளின் புராணங்களையும், அந்தாதி, பிள்ளைத்தமிழ் முதலிய பிரபந்த நூல்களையும், சொல்நயம், பொருள்நயம் கொழிக்க வெகு அழகாகப் பாடி இருக்கின்றார்கள். அத்தகைய தமிழ்ப் பெரும்புலவரைத் தாம் விரும்பியபடி ஆசிரியராக அடைந்தார் நம் ஐயர்.

பிள்ளை அவர்கள் ஐயரைக் கண்டதும், தமிழைப் பற்றிச் சிற்சில வினாக்கள் வினவினார். அவர் வியக்கும்படி அவர் வினாக்களுக்குத் தகுந்த விடைகளைப் பணிவாகவும்,

தெளிவாகவும் அளித்தார் ஐயர். அதனால், ஐயர் தகுந்த மாணவர் என்று, பிள்ளை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். அங்கேயே இருந்து கல்வி கற்கலாம் என்றும் இயம்பினார். எனவே, பிரியாத அருமை மகனை விட்டுப் பிரிய அவர் தந்தையார் அரிதில் ஒப்பினார். ஐயரவர்கள் தம்மைப்பெற்ற தந்தையைப் பிரிந்து, தமிழ்த் தந்தையாகிய பிள்ளையவர்களை நண்ணினார். அவரையே தமது அழிவில்லாத் தமிழ் நிதி என்றும் நம்பினார்.

பண்டைக் காலத்தில் நமது நாட்டில் சில மாணவர்கள் ஆசிரியர்களுடன் பல ஆண்டுகள் இருந்து கல்வி கற்பது வழக்கம். அதற்குக் குருகுலவாசம் என்று பெயர். அங்ஙனம் ஆசிரியருடன் கலந்து வாழ்ந்து, கல்வி கற்கும் பேற்றினைப் பெறுபவர் மிகச் சிலரே. அத்தகைய வாழ்க்கையால் மாணவன் எய்தும் நலங்கள் மிகப் பல. ஆசிரியரின் ஒழுக்க மாட்சி, குணமாட்சி, அன்புமாட்சி ஆகிய இம்மாட்சிகளையும், ஆசிரியரின் கல்வி மாட்சியையும், ஒரு தலைசிறந்த மாணவன் பெறுவான். இதைக் காட்டிலும் கல்வியை வளமுறக் கற்கும் மேலான வழி ஒன்றுமேயில்லை என்று கூறலாம். இங்கிலாந்திலும் சில பல்கலைக் கழக மாணவர்கள் இத்தகைய கல்வியைத் தான் பெறுகின்றனர் என்று இயம்புகின்றனர். அதற்கு இணையான கல்வி வேறில்லை என்றும் இக்காலத்தில் எல்லோரும் சொல்லுகின்றனர். இக்கல்வி முறையைத்தான் கைப்பற்றினார் நம் ஐயர்.

ஆசிரியருக்கு உதவி :

பிள்ளையவர்கள் அரும்பெரும்புலவராக விளங்கினமையால், எப்போதும் படித்த வண்ணமாகவும், பாடம் சொல்லியவண்ணமாகவும், நூல்கள் எழுதியவண்ணமாக

வுமே காலத்தைக் கழிப்பார். ஒரு நொடியையும் வீணுகக் கழிக்கமாட்டார். அவர் பேசும் உரைகள் அனைத்தும் பொன்னுரைகளாகவே மிளிரும். பிள்ளையவர்களின் குறிப் பறிந்தே ஐயர் பாடம் கேட்பார். மற்ற வேளைகளில் பிள்ளை அவர்களின் குடும்பப் பணிகளை எல்லாம் தாமாகவே மனம் உவந்து செய்து வந்தார். பிள்ளையவர்கள் பல வேளைகளில் நூல்கள் எழுத விரும்புவார். அக்காலத்தில் அழகான கடிதமும், வனப்பான மையூற்றுப் பேனுவும் இல்லை. நூல்களை எல்லாம் பனை ஓலைகளில் எழுத்தாணி கொண்டு எழுதவேண்டும். ஐயருக்குப் பனையேட்டில் எழுதத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் நல்ல பழக்கம் வந் திருந்தமையால், பிள்ளை அவர்கள் ஒரு நூலை எழுதும் போது ஐயரிடம் சொல்லிக்கொண்டே போவார். ஐயர் ஊக்கத்துடனும், உவப்புடனும், ஆசிரியர் முகம் மலருமாறு சொல்லியவைகளை ஒழுங்காகவும், பிழையின்றியும் பனை யேடுகளில் எழுதிக்கொண்டே போவார். இஃது எத்தகைய அருமையான செயல் என்று சொல்லவும் வேண்டுமோ?

தமிழிலுள்ள அருமை நூல்கள் பலவற்றையும் பிள்ளை அவர்கள், ஐயருக்கு அன்புடன் கற்பித்து வந்தார். அந் நூல்களின் நயங்களை எல்லாம் பளிங்குபோல் எடுத்துக் காட்டிய பிள்ளையவர்களிடம் பேரன்பும் மதிப்புங் கொண் டார் நம் ஐயர். பிள்ளை கூறிய பொன்னிலும் சிறந்த கருத்துக்கள் பலவற்றைக் கைப்பற்றினுர். ஆசிரியரைப் போலவே தமிழறிவைப் பிறர்க்கும் தாம் ஒரு காலத்தில் நயமுற நல்கவேண்டும் என்றும் நினைத்தார். அவர் தமி ழறிவு நாடோறும் பிறைபோல் வளர்ந்து, உயர்ந்த நிலையை அடைந்து வந்தது.

பிள்ளை அவர்களுக்குப் பல பெரும் புலவர்கள் மாண வர்களாகத் திகழ்ந்தனர். பெரும் புகழ்பெற்ற, வல்லூர்

தேவராசப் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதிய வேதநாயகம் பிள்ளை, கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த தியாகராசச் செட்டியார் ஆகிய இவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். நம் ஐயரோடு பாடம் கேட்ட, பெரும்புகழ்பெற்ற புலவர்களும் உண்டு. அவர்களில் பழனிக்குமாரத் தம்பிரான், குமாரசாமித் தம்பிரான், ஆறுமுகத் தம்பிரான் என்பவர்கள் சிறந்தவர்களாவார்கள். குமாரசாமித் தம்பிரான், பின்னர் திருப்பனந்தாள் மடாதிபதியானார்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை தென்னாட்டில் பெற்றிருந்த பெரும்புகழைப்பற்றி ஒரு சிறிது ஈண்டுச் சொல்லுதல் இன்றியமையாததாகும். செல்வத்திலும், அதிகாரத்திலும், சமயக்கல்வியிலும் சிறந்து ஒளிரும் திருவாவடுதுறை மடத்தின் ஆதீனத்தலைவரால் பெரிதும் பாராட்டப் பெற்றவர் அவர். மகாவித்துவான் என்னும் பட்டத்தையும் அம்மடத்துத்தலைவரால் அளிக்கப் பெற்றவர்; மடாதிபதிகளிடம் நண்பராகப் பேசவும், தம் கருத்துக்களை வெளியிடவும் சமத்துவம் பெற்றுத் திகழ்ந்தவர்; அம்மடத்தில் பல பரிசுகள் அவ்வப்போது பெற்றுப் பெரும் புகழ்பெற்றவர். தென்னாட்டிலுள்ள எல்லா மடாதிபதிகளும் அவரை இணையற்ற தனிப்பெரும் புலவராக எண்ணினார்கள். எல்லாப் புலவர்கள் கூட்டங்களிலும், எல்லா மடங்களிலும், எல்லாக் கல்வி மன்றங்களிலும், பிள்ளை அவர்களின் திருப்பெயரே புகழ் பெற்று மிளிர்ந்தது. எத்தகைய ஆற்றலைப்பெற்ற அரும் புலவனும் பிள்ளையவர்களின் பேராற்றலையும், பெரும் புலமையையும் சென்றவிடமெல்லாம் புகழாமலிரான்.

அக்காலத்தில் இருந்த மடங்கள் பொதுமக்கள் நன் மதிப்பையும், நல்லுதவியையும் பெற்றுத் திகழ்ந்தன.

அவர்கள் மடங்களுக்கு ஏராளமான நிலங்களையும், தோட்டங்களையும் நன்கொடையாக அளித்துவந்தனர். பல மக்கள் பெருந்தொகையாகப் பணமும் அளித்துவந்தனர். இம்மடங்கள் புலவர்களையும் பாராட்டி உதவி செய்து வந்தன. பல மாணவர்கள் உணவும், உடையும் மடங்களில் வழங்கப்பெற்றுத், தமிழறிவையும், சைவசமய அறிவையும் நன்குபெற்றுச் சிறந்து வாழ்ந்தனர். அத்தகைய புலவர்களுக்கு 'ஆதீன வித்துவான்கள்' என்ற பட்டமும் அளிக்கப்பட்டு வந்தது. இவ்வித அருமையான மடங்களில் தலைசிறந்து விளங்கியது திருவாவடுதுறை மடமாகும். இம்மடத்தில்தான் மேற்கூறிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும், மகாவித்துவான் என்னும் பெரும் பட்டத்தைப் பெற்றார். அக்காலத்தில் பல்கலைக் கழக வித்துவான் பட்டங்கள் இல்லை. ஒரு மாணவன் தமிழ் நூல்களைப் பல ஆசிரியர்களிடம் முறையாகக் கற்றுப் புலமை பெற்றுவிட்டால், அம்மாணவன் மடத்தில் இருந்த மடாதிபதியிடம் சென்று, தன் புலமையை அவர் அறியும்படி செய்வான். மடாதிபதி சிற்சில நூல்களில் இரண்டொரு நுணுக்கமான கேள்விகள் கேட்பார். அவைகளை அவர் நன்கு அறிந்து, தகுந்த விடைகள் கொடுத்தால், மடாதிபதி மகிழ்ச்சி அடைவார். அப்போதுதான் அவர் அவனுக்குப் புலவர் பட்டத்தையும் அளிப்பார்; பரிசும் வழங்குவார். இவ்வாறு தமிழை வளர்த்து வந்தனர் மடாதிபதிகள்.

மடத்தில் கல்வி :

நம் ஐயர் அவர்களுக்கும் மடத்தின் வாழ்க்கை, அவர் ஆற்றிய நல்வினையின் பயனாக வாய்த்தது. அவர் ஆசிரியராகிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை 1876-ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தனர். அவரிடத்தில் பெரும்புலமை

பெற்ற நம் ஐயர் அப்போது அடைந்த மனத்துயரை எடுத்துரைக்க இயலாது. அவர் மனம் தளர்ந்து, உதவியற்று, இன்னது செய்வது என்று தோன்றப்பெறுமல் தயங்கிக்கொண்டிருக்கையில், திருவாவடுதுறை மடாதிபதியாக இருந்த சுப்பிரமணிய தேசிகர் என்பவர் அவருக்கு உதவி புரிய முன்வந்தார். அவர்க்கு மீனுட்சிசுந்தரம் பிள்ளையிடம் அளவிலா அன்பும், மதிப்பும் உண்டு. நம் ஐயர் அப்பிள்ளையவர்களின் மாணவர் என்று அறிந்ததும், அவரைத் தம்மிடமே தமிழ்நூல்களை மடத்திலிருந்து கொண்டே பாடங்கேட்குமாறு சொல்லி, நம் ஐயரின் மனத்தைத் தேற்றினர். ஐயரின் மனம் சாந்தத்தையும், அமைதியையும் எப்போதும் விரும்பும். அத்தகைய மனத்திற்கு ஏற்பச் சைவமணமும் தெய்வமணமும் ஒருங்கு கமழும் மடத்தில், தமிழ் மணத்தையும் நுகர ஐயர் பெற்ற வாய்ப்பு ஒரு தனிவாய்ப்பே என்று சொல்லுதல்வேண்டும்.

ஐயர் மேற்கூறிய மடாதிபதியினிடமே பல அரிய தமிழ்நூல்களைப் பாடங்கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைந்தார். மடாதிபதியின்கீழ்ச் சைவத் தொண்டுபுரியும் பல தமிழ் அறிஞர்கள் உண்டு. அவர்களுக்கும் நல்ல தமிழ்ப் புலமை இருத்தல் அவசியமாகக் கருதப்பட்டது. அவர்களும் மடத்தில் தொண்டு செய்வதோடு, தமிழ்ப்பாடமும் கேட்பார்கள். அத்தகைய தம்பிரான்களுக்கு ஆசிரியரக மடாதிபதியின் கட்டளைப்படி, நம் ஐயர் இருந்து அவர்களுக்குத் தமிழ்நூல்களைத் தம் ஒய்வுநேரங்களில் கற்பித்துவந்தார். மடாதிபதியிடம் தாம் பாடம் கேட்டுக்கொண்டு, ஒய்வுநேரத்தில் அங்கிருந்த மற்றத் தம்பிரான்களுக்குப் பாடம் கற்பித்துவந்தார். இதைக் காட்டிலும் மேலான மதிப்பும், சிறப்பும் வேறுண்டோ?

**மடத்தில் மகாவித்துவான் பட்டம்:**

மேற்கூறியவாறு ஐயர் மடத்தில் பாடம் கேட்டுக் கொண்டும், பிறர்க்குப் பாடம் சொல்லிக்கொண்டும், வந்தமையால் இளமையிலேயே பெரும்புலமை பெற்றார். அங்ஙனம் நான்கு ஆண்டுகள் சைவமணத்திலும், தமிழ் மணத்திலும் அமிழ்ந்து, தமிழ்த் தேனைப் பருகி, மடாதிபதியிடம் மகாவித்வான் என்னும் பட்டத்தைப் பெற்று விட்டார். அப்போது அவர்க்கு அகவை இருபத்து நான்குதான். இருபத்தைந்து அகவைக்குள் செந்தமிழ் நாட்டிலே நற்றமிழ்ப்புலவர் என்று மடாதிபதியின் மூலமாகவும் ஏனைய புலவர்களின் மூலமாகவும் பெயர் வாங்கிவிட்டார். அவரிடம் கல்வி கற்ற தம்பிரான்களில் ஒருவர் சொக்கலிங்கத் தம்பிரான் என்பவர். பின்னர் அவர் திருப்பனந்தாள் மடாதிபதியானார். ஆறுமுக தேசிகர் என்னும் வேறொரு தம்பிரானும் ஐயரிடத்தில் பாடம் கேட்டவரே. பின்னர் அவர் குன்றக்குடி மடாதிபதியாக அமர்ந்தார். இவ்வாறு சிறுவயதிலேயே சில மடாதிபதிகளுக்கும் ஆசிரியராகத் திகழ்ந்து பெருமை பெற்றார் ஐயர்.

---

## ௯. கும்பகோணக் கல்லூரியில் ஆசிரியர்

தென்னாட்டில் பெரும்புலவர் என்று இளவயதிலேயே பேர்பூண்ட நம் ஐயர், முதன் முதலாகக் கும்பகோணத்தி லுள்ள அரசாங்கக் கல்லூரியில் தமிழாசிரியராக **1880**-ஆம் ஆண்டில் அமர்ந்தார். மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர் களின் சிறந்த மாணவர்களில் ஒருவர், தியாகராசச் செட்டி யார் என்பவர். அவர்தான் மேற்கூறிய கல்லூரியில் தமிழ்ப்புலமை நிகழ்த்தி வந்தார். அவருடைய உதவியால் தான் ஐயர் அவர்களுக்கு அச்சிறுவயதில் அவ்வளவு பெரிய ஆசிரியர் பதவி கிடைத்தது. மேற்கூறிய செட்டி யார் செய்த உதவியை ஐயர் மறக்கவேயில்லை. தமது குடும்பத்திற்கு அப்போது உதவி தேவையாயிருந்தமை யால், தம் தாய் தந்தையரை மகிழ்விக்கவும், குடும்பச் சுமையைத் தாமும் ஏற்றுக்கொள்ளவும், ஐயர் ஒரு ஆசிரி யர் அலுவலை ஏற்றுக்கொண்டார். உண்மையில், அவருக்கு மடாதிபதியிடம் மேலும் மேலும் தமிழ்நூல்கள் பாடம் கேட்க வேண்டுமென்ற ஆவல்தான் உரமாயிருந்தது. ஆனால், அவ்வாவலுக்கு மேற்பட்டதாக இருந்தது குடும்பத்திற்கு உதவி செய்யவேண்டிய பொறுப்பு. அப்போதே குடும்ப நல்வாழ்விற்கு உரிய பொறுப்பை யும் களிப்புடன் ஏற்றுக்கொண்டார் நம் ஐயர்.

**கற்பிக்கும் நயம்:**

தமிழ்வகுப்புகளில் ஐயர் பாடம் சொல்லும்போது மாணவர்கள் உள்ளங்களை எல்லாம் கவர்ந்துவிடுவார். தம் தந்தையின் இசையறிவு சிறிது, தாமும் பெற்றிருந்தமை யால், அவர் பாடம் சொல்லும்போது, பல பாடல்களை இசையுடன் பாடி, நயம்படப் பொருள் கூறுவார். பாடத்

தில் நன்கு கருத்தைச் செலுத்த விரும்பாத மாணவனும் அவர் பாட்டின் இனிய இசைக்கு அடிமையாகிவிடுவான். இசைஇன்பத்தில் தன்னை அறியாது மயங்கிய மாணவன், பின்னர் ஐயர் கூறும் பொருள் நயங்களிலும் அறிவைச் செலுத்திவிடுவான். இவ்வாறு மாணவர்களுக்கு அருமையான புராணச் சொற்பொழிவுபோல் ஐயர் பாடம் சொல்லியதால், மாணவர்களை எளிதில் தம் வயமாக்கிவிட்டார்.

சாமிநாதையர் மாணவர்களின் குற்றங்களைப் பொருட்படுத்த மாட்டார். அவர் பொறுப்பை நன்கு உணர்ந்து பாடங்களை முன்னதாகவே வீட்டில் ஒருமுறை ஒழுங்காகக் கவனித்துக்கொண்டு, பின்னரே வகுப்புகளில் அப்பாடங்களைக் கற்பிப்பார். அவர் பழுத்த புலமை பெற்றிருந்தபோதிலும், எப்பாடத்தையும், எந்நேரத்திலும், எவ்விடத்திலும் ஒருவித ஆராய்ச்சியுமில்லாமல், கற்பிக்கும் திறமை பெற்றிருந்தபோதிலும், மேல்நாட்டு ஆசிரியர்களைப்போல், வீட்டில் முன்னதாகப் பாடங்களைச் செவ்வனம் பார்த்து ஆராய்ச்சி செய்துகொண்டுதான் கல்லூரியில் பாடம் கற்பிப்பார். இதை அவர் இழிவாக எண்ணவில்லை; இதுதான் ஆசிரியர் கடமை என்று கருதினர். நல்லநெறியில் நடக்கத் தெரிந்துகொள்ளாத மாணவனும், ஐயர் தமிழ்வகுப்பில் புகுந்து, அவர் பாடம் சொல்வதைக் கேட்டதும், நல்ல நெறியைப் பின்பற்றுவான். ஏனெனில், ஐயர் எந்த மாணவனிடத்திலும் சினத்தையே காட்டமாட்டார். வெகுளியை எழுப்பக்கூடிய நடக்கை எப்போதாகிலும் ஒரு மாணவனிடத்தில் காணப்பட்டால், அப்போது அவனைப் பார்த்துப் புன்னகைதான் புரிவார். அச்சிறு நகையின் பெரும்பொருள் யாது என்று நெறிதப்பிய மாணவனும் தெரிந்து கொள்வான். பின்னர் அவனிடத்தில் இனிய மொழிகள் பகர்வார். அவன் ஊர்

யாதெனவும், தாய் தந்தையர் யாவர் எனவும், அருமை தவழ, மெதுவாகக் கேட்பார். அப்போதே நெறி தவறிய மாணவன், நன்னெறியைக் கைப்பற்றுவான். ஒவ்வொரு மாணவனிடத்திலும் தமது உயர்வைக் காட்டாமல், ஐயர் அன்புடனும், மரியாதையுடனும் இன்மொழிகள் கூறியதால், எல்லா மாணவர்களும் ஐயரைத் அருமைத் தந்தை என்றே எண்ணி மகிழ்வாராயினர். கல்வியறிவு அளிப்பதிலும் அன்னைபோல் அன்பையும், அருளையும் காட்டி, அன்னையானவள் அன்புடனும், இன்புடனும் பிள்ளைக்கு அமுதூட்டுவதுபோல், ஐயர் ஒவ்வொரு மாணவனுக்கும் அன்புடனும், இன்புடனும் தமிழ்அமுதை ஊட்டி வந்தார்.

### வீட்டில் கற்பித்தல்:

கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் ஐயர் 1903-ஆம் ஆண்டு வரையில் ஆசிரியத் தொழில் புரிந்தார். கல்லூரியில் பல மாணவர்கள் அவரிடத்தில் தனிமதிப்பு வைத்து, அவர் வீட்டிலும் வந்து, தனிப்படச் சில நூல்கள் பாடம் கேட்டனர். ஐயர் சிறு பிள்ளைகளுக்கு மாத்திரம் ஆசிரியர் அல்லர் ; வயது வந்த பெரியவர்களுக்கும் ஆசிரியராகத் தம் மனையில் திகழ்ந்தார். கும்பகோணம் முழுவதும் ஐயர் வீட்டில் தமிழ்ப்பாடம் சொல்லும் மாட்சி பரவலாயிற்று. பாடம் கேட்கும் வாய்ப்பு எத்தகையோர்க்கும் உண்டு என்று அறிந்ததும், பொது மக்களில் பலர் அவர் திருமனைக்கு ஆர்வத்துடன் வந்து, தமிழ்நூல்களைப் பாடம் கேட்கலானார்கள். செல்வத்திலும், அதிகாரத்திலும் சிறந்தவர்களும் வந்து பாடங்கேட்டார்கள். அதனால், ஐயர் அழகிய மனை, கல்விமழை பொழியும் ஒரு சிறு மன்றமாக இலங்கிற்று என்று கூறலாம்

## ௬. இல்லற மாட்சி

ஐயர் இல்லற வாழ்க்கை ஓர் அற்புதமான வாழ்க்கை. அவர் இல்லறத்தில் உண்மை இன்பம் அடைந்தது யாதெனில், கல்வியின்பமே. உழைப்புக்கு என்றே பிறந்தவர் ஐயர் என்று கூறலாம். அவ்வுழைப்பையே நாளடைவில் தலைசிறந்த இன்பமாகக் கொண்டுவிட்டார். உழைப்பு என்றால் எல்லா மக்களுக்கும் வேம்பாகத்தான் இருக்கும்; ஆனால் ஐயருக்கு அது கரும்பாகத்தான் இனித்தது. "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ" என்று ஒரு புலவர் கூறினார். அவர் வாக்கைச் செயலில் உண்மைப் படுத்தினார் நம் ஐயர்.

திருமணம் என்பது எல்லோர்க்கும் ஒரு தனி இன்பம் அளிப்பது என்றுதான் அனைவரும் எண்ணுகின்றனர். ஆனால், திருமணம் என்பது உலகில் ஒரு பெரிய புதிய பொறுப்பைக் கொண்டுள்ளது என்று எண்ணுபவர் இல்லை. திருமணம் புரிந்து, இல்லறம் புரிவது என்பது உலகிலுள்ள பலவகைப்பட்ட இன்பங்களை அடைவது என்று எண்ணுகின்றனர் பலர். மாடமாளிகையில் மகிழ்வுடன் அமர்ந்து, அறுசுவை உணவு நுகர்ந்து, ஆடை அணிகலன்கள் அணிந்து, மனைவி மக்களோடு மகிழ்ந்து, உந்துவண்டியில் அமர்ந்து, உலாவுவதுதான் இல்லறத்தின் மாட்சி என்று எண்ணுபவர் உலகத்தில் பெரும்பாலோர். ஆனால், இல்லறத்தில் ஒருவன் இருக்கையில், அவன் கடமைகள் பலஉள என்பதையும், அன்பும், அறனும் பூண்டு மனைவியின் மனம் கோணாமல் நடந்து, குடும்பச் சுமையை மகிழ்வுடன் தாங்கி, வாய்மையையும், தூய்மையையும் கலன்களாகப்பூண்டு, உற்றாரையும், உறவினரையும் மகிழ்வித்து, நல்விருந்தூட்டி, ஏழை மக்களுக்குத்

தாராளமாக அமுதும், பொருளும் வழங்கி, செருக்கையும், உடைப்பகட்டையும் வெறுத்து அமைதியான, பணிவான, எளிய வாழ்க்கையை அடைதல் என்று எவரும் எண்ணமாட்டார். நம் முன்னோர்கள் அத்தகைய இல்லற வாழ்வைத் தான் நல்லற வாழ்வாக நினைத்தனர். அத்தகைய வாழ்வில் வாழவேண்டுமென்று பற்பலவாறு மக்களுக்குச் சொல்லியும், நூல்கள் எழுதியும் வந்தனர். நம் ஐயர் திருமணம் புரிந்து, இல்லறம் புகுந்து, நல்லறம் நிகழ்த்துகையில், நம் முன்னோர்கள் வாழ்ந்த வண்ணமே வாழ்ந்தார் என்று கூறலாம்.

ஐயர் தம் இல்லறத்தின் இன்பமாக உண்மையில் நினைந்தது உழைப்பே. அவருக்கு வாய்த்த மனைவியார், அவர் மனம்போல் நடந்து, அவர்க்குப் பணிகள் பல உள்ளன்போடு புரிவார். இல்லறத்தின் பேறுகிய, மகப்பேற்றையும் பெற்றார் நம் ஐயர். “மக்கள் மெய் தீண்டல் உடற்கு இன்பம்” என்ற திருவள்ளுவர் மொழிக்கேற்ப, தமக்குப் பிறந்த அருமை மகனை அன்புடன் வளர்த்து இன்புற்றார்; அவர் சொற்கேட்டல் செவிக்கு இன்பம் என்று வள்ளுவர் கூறியபடி, தம் செல்வ மைந்தன் மழலைச் செம்மொழிகளையும் கேட்டு ஒரு புதிய இன்பத்தைத் தம் வாழ்க்கையில் கண்டார். அவர் மனம்போல அவருக்கு நல்ல மனைவி வாய்த்தார்; நல்ல மைந்தனும் பிறந்தான். ஆதலால், அவருக்கு இல்லறத்தில் இன்பம் தெரிந்ததே அல்லாமல், தொல்லை தெரியவில்லை. ஒரு குடும்பத்தில் நல்லமைந்தன் ஒருவன் இருந்தால்போதாதா? “புற்றீசல்போலப் புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர், காப்பதற்கும் வகையறியீர், கைவிடவும் மாட்டீர்,” என்று பட்டினத்தடிகள் கூறியதுபோல், பல பிள்ளைகளைப் பெற்றுப் பெருந்தொல்லைகளை அடையும்

சில மக்களைப்போல் இல்லறவாழ்வில் துன்புறவில்லை நம் ஐயர். அவர் ஆசிரியத்தொழில்புரிந்து, மாதச்சம்பளம் வாங்கித் தம் தாய் தந்தையரிடத்தில் அளிப்பதுதான் அவர் குடும்ப சம்பந்தமாக ஆற்றிய பணிகள் என்று சொல்லலாம். குடும்ப அலுவல்கள் அனைத்தையும் அவர் தாய் தந்தையரே கவனித்துவந்தனர். தாம் மாத்திரம் தம் கூடவே பிறந்த உழைப்பையே தான், உரமாகக் கைப்பற்றினர்.

## வினையில் விருப்பம் :

ஒருவன் இல்லறத்திலும் இன்பத்தை விரும்பாமல், உழைப்பைத்தான் விரும்பவேண்டும் என்றும், அவ்வுழைப்பே தான் குடும்பமாட்சிகள் அனைத்தையும் அளிக்கும் என்றும், அத்தகைய உழைப்பை மேற்கொண்டவன்தான் குடும்பமாகிய கட்டடத்தை வன்மையாகத் தாங்கும் கற்றாண் என்றும் நம் தெய்வப்புலவர் கூறிய,

> "இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
> துன்பந் துடைத்தூன்றுந் தூண்"

என்னும், திருக்குறளின் சாரத்தை நன்கு பருகிய நம் ஐயர், இல்லறத்தில் இன்பத்தை விழையாமல், உழைப்பைத்தான் விழைந்தார். அதனால் அவர் குடும்பத்தையும் இனிது ஓம்பினர்; பொருளையும் பெற்றார்; புகழையும் பெற்றார்; பின்னர்ப் பல பட்டங்களும், பரிசுகளும் பெற்றார்; அழியாப் புகழும் பெற்றுத் தமிழுலகில், இன்றும் ஒவ்வொரு தமிழர் உள்ளத்திலும் குடியிருக்கின்றார். பற்பல சொற்பொழிவு மேடைகளிலும் இத் திருக்குறளையே அடிக்கடி அவர் எடுத்தும் உரைப்பார்; அதன் படியே நடந்து அதன் பயனையும் எய்தினர்.

உழைப்பை மேற்கொண்ட ஒருவன் உலகில் ஒன்றிற்கும் அஞ்சவேண்டியதில்லை. அவனுக்கு வறுமையில்லை; கவலையில்லை; இடரில்லை; இழிவுமில்லை. உழைப்பாகிய கருவியைச் சரியாகப் பயன் படுத்துபவன் இவ்வுலகில் எல்லா நலங்களையும் அடைகிறான். ஒருவன் பெரிய பணக்காரனாகத் திகழ்கின்றான் என்றால், அதற்கு அவன் உழைப்புத்தான் காரணம். ஒரு பெரிய கல்விமானாக ஒருவன் ஒளிர்கின்றான் என்றால், அதற்கும் உழைப்பே தான் காரணம். ஒருவன் பெரிய பதவியில் மிளிர்கின்றான் என்றால், அதற்கும் உழைப்பேதான் காரணம். உழைப்பாகிய அருமைக் கருவியை வைத்துக்கொண்டு, உலகில் பயன்படுத்தாமல் இருக்கின்றவர்களே பல இன்னல்களையும், இடையூறுகளையும் அடைகின்றனர். அறுவகை உண்டி, சுவைபட அமைக்கப்பட்டுப் புசிப்பதற்கு இருந்தால், அதைப் புசியாது ஒருவன் பசியால் வருந்தினால், அது யார் குற்றம்? உணவின் குற்றமாகுமா? குளிர்ந்தநீர் மணத்துடன் பருகக் குடத்தில் இருந்தால், அதைப் பருகாமல் நீர்வேட்கையினால் ஒருவன் துன்புற்றால், அது யார் குற்றம்? குளிர்ந்தநீரின் குற்றமாகுமா? இவைபோல உழைப்பாகிய இன்சுவை உணவும், குளிர்ந்த பானமும் இருக்கையில், பசியாலும், நீர் வேட்கையாலும் வருந்தும் மக்களைப்போல், உழைப்பைப் பயன் படுத்தாமல் துன்புறுகின்றனர் பலர். அவர்கள் நம் ஐயரின் உழைப்பின் உண்மைப்பயனைச் செவ்வனம் அறிதல் வேண்டும்.

வாழ்க்கை முறை:

ஐயர் காலையில் ஐந்து மணிக்கு எழுந்து, கடவுள் வழிபாடு செய்வார்; தேவாரம், திருவாசகம் இவைகளை உள்

ளம் இனிக்க ஓதுவார்; பின்னர்ப் பல நூல்களைப் பார்த்துப் பிழைகளைத் திருத்தி ஏட்டிலிருந்தவைகளைப் புத்தகங்களாகச் செய்ய உழைப்பார். பின்னர்த் திருவமுது புசித்துத் தாம் பணிசெய்த மாகாணக் கல்லூரிக்குச் செல்வார். மீண்டும் மாலையில் வீடுவந்தும், பனைஏடுகளை எடுத்துப் பரிசோதனை செய்வார்; வரலாற்றுக் குறிப்புகள் எழுதுவார்; தம் மாணவர்களுக்குப் பாடம் சொல்லுவார். பிறகு ஒன்பது மணிக்கு உணவருந்தித் தாயுமானவர் பாடல், பட்டினத்தார் பாடல் முதலிய அருமைப் பாடல்களை அமைதியாக ஓதி, இறைவன் அருளை வேண்டுவார். அதன் பின்னர் ஐயர் படுக்கைக்குச் செல்வார். காலை ஐந்து மணியிலிருந்து இரவு பத்துமணி வரையில் மேற்கூறிய நிலையில்தான் அவர் வாழ்க்கை நடைபெற்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, அவர் குடும்ப அலுவல்கள் எல்லாம் அவர் தாய் தந்தையராலும், பிறராலுமே கவனிக்கப் பட்டன.

குடும்பத்தில் எத்தகைய துன்பமும், மனக்கவலையும் அவர் அடையவில்லை. உடல்நலம் எப்போதும் செம்மையாக இருந்தமையால், தளராமல் உழைத்த வண்ணமே காலத்தைக் கழித்தார்; நூல்களைப் படித்தார்; முன்னர் வாராத நூல்களைத் தமிழ் உலகுக்குக் கொண்டு வந்தார். மாசற்ற, இணையற்ற, தலைசிறந்த இன்பம் கல்வியின்பமே என்று தம் அநுபவத்தில் கண்டு, அக்கல்வியின்பத்திலேயே காலத்தைக் கழித்துவந்தார். அவருடைய இல்லற வாழ்க்கையைப்போல் மாட்சிமை பெற்ற வாழ்க்கை, பிறர்க்கு வாய்த்தல் அருமையினும் அருமையே. அவர் வாழ்க்கையை அறியும் மாணவர்கள், அவரைப் பின்பற்றி, உழைப்பையே உரமாகக் கைக்கொண்டு, உலகில் பல நலங்களையும் பெறுவார்களாக.

## ரு. சென்னை மாகாணக் கல்லூரியில் ஆசிரியர்

சென்னை மாகாணத்தில் கல்வித்துறையில் தலைசிறந்த பெருமை பெற்றது, சென்னை மாகாணக் கல்லூரியே. அக் கல்லூரியில் படிக்கும் மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக் கும் தனிச் சிறப்புண்டு. மாணவர்களில் பெரும்பாலும் சாலச்சிறந்து விளங்கிய தலைமை மாணவர்கள்தான், அக் கல்லூரியில் உயர்தர வகுப்புகளில் படித்துப் பெரிய பட்டங்கள் பெற்றுப் பெரும் பதவிகள் பின்னர்ப் பெறுவது வழக்கம். அதில் வாசிக்கும் மாணவனுக்கும் ஒரு தனி மதிப்பு உண்டு; ஆசிரியர்களுக்கும் தனி மதிப்பு உண்டு.

அரங்கநாத முதலியார் :

அத்தகைய தலைசிறந்த கல்லூரியில் தலைமைஆசிரிய ராக அக்காலத்தில் திகழ்ந்தவர், பூண்டி அரங்கநாத முதலியார், எம். ஏ. அவர்கள் ஆவார். அவர் பேரறிவும், பேராற்றலும், பெரும்புகழும் பெற்றவர். வேளாண் குலத்தார் செய்த நற்றவத்தால் தோன்றியவர். ஆங்கிலத் திலும், தமிழிலும் பெரும்புலமை பெற்றவர். கச்சிக் கலம்பகம் பாடியவர் அவரே. தென்னாட்டிலே அப்பெரி யாரை அறியாதார் யாரும் இல்லை. அவர் குலவேற்றுமை, மதவேற்றுமை முதலிய எத்தகைய வேற்றுமையையும் பாராட்டுபவர் அல்லர். கல்வி மாட்சியிற் சிறந்த எக் குலத் தவரையும் பாராட்டும் பெருந்தகையாளர். இங்கிலாந்தி லும் இவர் பெருமை பரவியிருந்தது ஒரு சமயம் சென் னையில் கவர்னர் பதவி பெற்றிருந்த ஓர் ஆங்கிலப் பேரறி வாளர், சென்னையில் நிகழ்ந்த ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார். அப்போது, மேற்கூறிய அரங்கநாத முதலியாரும் அக்கூட்டத்திற்கு வந்திருந்தார். கவர்னர்

பேசும் முன்னர், அவையோரை நோக்கி, "அன்பர்களே! நான் இன்றையதினம் தென்னாட்டின் தலைசிறந்த கல்விமானாகிய, பெரும்புகழ்பெற்ற, அரங்கநாத முதலியார் முன்னிலையில் பேசும் பெருமையைப் பெற்றேன். இதனினும் மேலான சிறப்பு எனக்கு வேறுளதோ?" என்ற பொருள் பட ஆங்கிலத்தில் கூறினார். அங்ஙனம் வெளிநாட்டாராகிய கவர்னரே அரங்கநாத முதலியாரைப் புகழ்ந்தார் என்றால், அம்முதலியாரின் பெருமையை எடுத்துரைக்க யாரால் ஆகும்?

அத்தகைய பெரும்புகழ்பெற்ற முதலியார் அவர்கள், தாமிருந்த கல்லூரிக்குத் தலைசிறந்த தமிழ்ப்புலவரை ஆசிரியராக அமைக்க விரும்பினார். நம் ஐயர் அவர்களின் தமிழ்த்தொண்டு முழுவதும் கும்பகோணங் கல்லூரிதான் பெற்றுப் பொலிவுறுகின்றது என்றும், தென்னாட்டிலே அவருக்கு இணையான செந்தமிழ்ப்புலவர் எவரும் இல்லை என்றும், அவர் பெருங்குணம் வாய்ந்த அருமை ஆசிரியர் என்றும் நம் முதலியார் அறிந்தார். ஆதலால், கும்பகோணத்திலிருந்த ஐயர் அவர்களைத் தம் கல்லூரிக்கு ஆசிரியராக வருமாறு கேட்டுக்கொண்டார். ஐயர் தம்முடைய தந்தையாரைப் பிரிய மனமின்றிச் சில ஆண்டுகள் கும்பகோணத்திலேயே இருந்து வந்தார். ஆனால், அவர் தந்தை இவ்வுலக வாழ்வை நீத்த பின்னர், 1903-ஆம் ஆண்டில், சென்னை மாகாணக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராக வந்தார்.

### மாகாணக் கல்லூரியில் தமிழ்மணம்:

சென்னை மாகாணக் கல்லூரியிலே ஐயரின் பெருமை, மாணவர் உலகில் முன்னிலும் பன்மடங்கு மிகுதியாகத் தெரியவந்தது. அவர் அக்கல்லூரியில் கல்வி கற்பித்த

மாண்பை மீண்டும் எடுத்து உரைக்கவேண்டிய கட்டாய மில்லை. அக்கல்லூரியிலும் ஒவ்வொரு மாணவனும் ஐய ரைத் தன்னை உயர்நிலைக்குக் கொண்டுவரும் தமிழ்த் தந்தை என்றே எண்ணினன். மார்க்குகள் குறைவாக வாங்குகிற மாணவர்களை ஐயர் ஏளனம் செய்யமாட் டார்; ஊக்கத்தையே ஊட்டுவார்; "அடுத்த தேர்வில் சற்று ஊக்கத்துடன் வாசித்தால், நல்ல மார்க்குகள் கிடைக்கும். இஃதென்ன அருமை! மார்க்குக் குறைவாக வாங்கியதால் நீ எவ்விதத்திலும் தாழ்ந்தவனல்ல. உனக்கு நல்லறிவு மிகுதியாக உளது. அதைத் தமிழ்ப்பாடத்திலும் பயன்படுத்துதல் வேண்டும்," என்று இவ்வாறெல்லாம் அத்தகைய மாணவர்களிடம் நயமொழிகள் கூறுவார். இவ்வாறு நயமான வழிகளிலேயே மாணவர்கள் மனத் தைப் பண்படுத்தினர் நம் ஐயர்.

ஓய்வு பெற்றார்:

அக்கல்லூரியில் 1903-ஆம் ஆண்டிலிருந்து, 1919-ம் ஆண்டு வரையில் மாணவர்களும், ஆசிரியர்களும் வியக்கு மாறும் மகிழுமாறும் தமிழ்ப்பேராசிரியர் தொழிலை நிகழ்த்தினர். அரங்கநாத முதலியாரின் பெருமதிப்பை யும் பெற்றார். இருவரும் தமிழ்ப்புலவர்கள் என்ற நிலையில், நண்பர்போல் அளவளாவி மகிழ்ந்தனர். எல்லா ஆசிரியர்களும் நம் ஐயரைத் தமிழாசிரியரெனக் குறை வாக எண்ணாமல், ஆங்கில ஆசிரியர்களினும் சிறந்தவ ராகவே எண்ணினர்கள். அதற்குக் காரணம் அவர் அருந் தமிழில் பெற்ற பெரும்புலமையும், எல்லோரிடத்திலும் காட்டிய அரும்பெருங்குணமுமே என்று சொல்லலாம். சென்னைமாநகர் முழுதும் சாமிநாதையர் எல்லோரினும் சிறந்த தமிழ்ப்பேராசிரியர் என்ற பெயர் பரவிற்று. ஐய

ரவர்கள் சென்னையில் உள்ள திருவட்டீசுவரன் பேட்டை யையே தமக்குரிய இருப்பிடமாகக் கொண்டுவிட்டார். அங்கு அவருக்கு உரிமையாகத் திருமனையும் ஏற்பட்டது. அவர் புகழும் உழைப்பும் உச்ச நிலையை அடைந்தது; அதன் பயனையும் உச்சநிலையில் பெற்றார்; பொருளும் சிறந்தது. தமிழ்ப்புலவர்களில் செல்வத்தில் சிறந்த புலவர், ஐயர் என்ற பெயரும் உண்டாயிற்று. இவ்வாறு ஆசிரிய ராகவே விளங்கி அரசாங்கத்தின் சட்டப்படி 1919-ஆம் ஆண்டில், சென்னை மாகாணக் கல்லூரி ஆசிரியர் வேலையை நீத்து, ஒய்வு பெறுவார் ஆயினர்.

---

## கூ. மீனாட்சி தமிழ்க் கல்லூரியிற் பணி

தென்னாட்டில் சிதம்பரம் என்னும் தெய்வத் திரு நகரைப்பற்றி அறியாதார் ஒருவருமிலர். தமிழின் நன் மணம் நம் ஐயர் மூலமாக அங்கும் மிகுதியாகப் பரவும் வாய்ப்பு நேர்ந்தது. செல்வத்தில் மிகச் சிறந்து, தென் னாட்டில் பெருவள்ளல் என்னும் பேர்பெற்றுத் திகழ்ந்த இராஜா, சர். அண்ணாமலைச் செட்டியார் என்பவர், பலவழி களில் பொதுமக்கள் நன்மைக்காகப் பல நன்கொடைகள் அளித்து, அழியாப் புகழ்பெற்றவர். கல்வி வளர்ச்சியில் அதிக ஆர்வம் கொண்டவர்; தமிழ் வளர்ச்சியில் தனி ஆர்வம் உடையவர். அவர் மேற்கூறிய சிதம்பரத் திருநகரில், ஒரு பெருந் தமிழ்க் கல்லூரியை நிறுவினர். ஓய்வுபெற்று இருந்த ஐயரவர்கட்கு ஓய்வுகொடுக்க அவர் விரும்பவில்லை. அத்தகைய சிறந்த தமிழ்க் கல்லூரிக்குத் தகுந்த பெரும்புலவர் ஐயரே என்று அண்ணாமலைச் செட்டியார் எண்ணினர். ஆதலால், அவர் ஐயரை வர வழைத்துத் தாம் ஏற்படுத்திய கல்லூரியிலும் தமிழ்த் தொண்டு புரியுமாறு கேட்டுக்கொண்டார். ஐயர் உழைப் பின் மணிமுடியாயிற்றே! தமிழ்த்தொண்டை ஆற்றுவ தென்றால், தனி மகிழ்ச்சி அடைபவர் ஆயிற்றே! அகவை முதிர்ந்த காலத்திலும் ஊக்கத்தை மேற்கொண்டு, செட் டியாரின் விருப்பின்படி அக்கல்லூரியிலும் தொண்டாற்ற முன்வந்தார். அங்கு அனைவரும் மகிழுமாறு அம் முதுமை யிலும் ஒழுங்காகத் தமிழ்த்தொண்டுபுரிந்து, மூன்று ஆண்டுகள் அக்கல்லூரியில் இருந்தார். தமிழ்மாணவர் களும் அவரிடம் தமிழறிவு சிறக்கப்பெற்றுப் பெரும்பயன் எய்துவாராயினர்.

## வித்துவான் தேர்வுத் தலைமை :

அக்காலத்தில் ஆங்கில ஆட்சியால் தமிழன்னை, தன் தனிச் சிறப்பை இழந்திருந்தாள். ஆங்கிலத்தில் எல்லாச் சிறப்புகளும் உண்டாயினவேயன்றித் தமிழ் கற்பவர்க்கு ஒரு சிறப்பும் இல்லாதகாலமாய் இருந்தது. தமிழை மிகுதியாகக் கற்பதே மதிப்புக் குறைவு என்று எண்ணுங்காலமாக இருந்தது. தென்னாட்டில் வழங்கும் மொழி, தமிழ்மொழிதானா? என்ற ஐயமும் பிறந்துவிட்டது. இவ்வாறு தமிழ்வளம் குன்றி இருந்த காலத்தில், இறைவன் துண்ணெனக் கண்திறந்தான் என்றுதான் சொல்லவேண்டும். கண்மூடிகளாக இருந்த நம் தமிழர்கள், கண்களைச் செவ்வனம் திறந்துகொண்டார்கள். சில தமிழறிஞர்கள் தமிழை அரசாங்கத்தில் அணிபெறச் செய்ய வேண்டும் என்று அரும்பாடுபட்டனர். அவர்களில் தலைசிறந்து விளங்கியவர், காலஞ்சென்ற, கா. நமசிவாய முதலியார் அவர்கள். அம் முதலியாரும், வேறு சில தமிழாசிரியர்களும் எடுத்த நன்முயற்சியால், சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் வித்துவான் தேர்வுகள் ஏற்படுத்தப்பட்டன. அதிலிருந்துதான் அரசாங்க உடன்பாடு பெற்ற, வித்துவான் பட்டங்கள் தோன்றின. அவ் வித்துவான் தேர்வு அவைக்கும் ஐயரே தலைவராக நியமிக்கப்பட்டார். பல ஆண்டுகள் அத்தொண்டினை இனிதாக ஆற்றினார் நம் ஐயர்.

மைசூர், திருவனந்தபுரம், காசி, ஆந்திரநாடு ஆகிய இவ்விடங்களிலுள்ள பல்கலைக்கழகங்களில் தமிழ்த் தேர்வுகளுக்குத் தனியாக அவைகள் உண்டு. அவைகளிலும் நம் ஐயரை உறுப்பினராகப் பல ஆண்டுகள் ஏற்படுத்தினர்.

---

## எ. மதுரைத் தமிழ்ச்சங்கத் தொண்டு

மதுரைமாநகரம் தமிழன்னைக்குத் தனியிருக்கையாக நெடுங்காலமாக வந்துளது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னரேயே தமிழ்மொழியின் சிறப்பை எல்லோர்க்கும் விளக்கப் பாண்டியர்களால் அங்குத் தமிழ்ச்சங்கம் நிறுவப் பட்டது என்பர். தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம் என மூன்று சங்கங்கள் அங்கு இருந்தன என்றும், அச்சங்கங்களில் மாபெரும்புலவர்கள் வீற்றிருந்தனர் என்றும், நக்கீரர் என்பவர் கடைச்சங்கத்தில் தலைசிறந்த பெருமைபெற்றவர் என்றும் கூறுகின்றனர். தமிழ்நாட்டில் தமிழின்பெருமையை உள்ளவாறு அறியவேண்டு மானால் மதுரைமாநகரில்தான் அறியவேண்டுமென்றும் சொல்லுவதுண்டு. உண்மையில், நம் செந்தமிழைப் பல நூற்றாண்டுகளாக அன்புடன் பேணி வளர்த்துவந்தவர்கள் மதுரையில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்களே. அவர் களுக்குத் தமிழ்மொழியில் ஒப்பிலா அன்பு உண்டு.

### பாண்டித்துரைத்தேவர் :

இத்தகைய சிறப்புகளை உடைய மதுரைமாநகரத் தில், தமிழின் மணம் என்ஞான்றும் கமழவேண்டுமென் றும், தமிழ்மக்கள் அனைவரும் தமிழில் அன்புகொண்டு அதை வளர்க்கவேண்டுமென்றும், எண்ணிப் **பாண்டித் துரைத்தேவர்** என்பவரால் அங்குப் பிற்காலத்திலும் தமிழ்ச் சங்கம் ஒன்று நிறுவப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகம், தமிழ் வித்துவான் தேர்வுகள் ஏற்படுத்துவதற்கு முன்ன மேயே,மதுரையில் அத் தமிழ்ச்சங்கம் இருந்துவந்தது. அச் சங்கம் மாணவர்களுக்குத் தேர்வுப் பட்டங்களும் அளித்து வந்தது. இன்றும் அச்சங்கம் கல்லூரி ஒன்றும் நடத்திவரு

கின்றது. அங்குப் பட்டம் பெற்ற பல புலவர்கள், இன்றும் விளங்குகின்றனர்.

மேற்கூறிய தமிழ்ச் சங்கத்தை நிறுவிய பாண்டித் துரைத்தேவரும் நம் சாமிநாதையரின் அரும்பெரும் புலமையைப்பற்றிக் கேள்வியுற்றார். தம் சங்கத்தில் நம் ஐயரை வாழ்நாள் அளவும் புலவராக அமர்ந்து, அதைச் சிறப்பிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். தமிழைப் பல வழிகளிலும் வளர்க்கவேண்டும் என்ற பேராவல் கொண்ட ஐயர் அத்தகைய தமிழ்த்தொண்டும் புரிவதற்குக் களிப்புடன் முன்வந்தார். தமிழ்மொழிக்கு என்ன தொண்டு புரியும்படி, யார் கேட்டாலும் ஐயர் ஊக்கத்துடன் அதைச் செய்பவராதலால், அவர் அச்சங்கத்திலும் அருந்தமிழ்ப் புலவராக இருந்து, சிறப்பித்துத் தாமும் சிறப்புற்றார்.

---

## அ. சொற்பொழிவுத் திறமை

நயமிகு சொற்பொழிவு :

சொற்பொழிவு செய்வது என்பது, பலர் எண்ணுவது போல், எளிய செயல் அன்று. சொற்பொழிவாளர் அவையில் உள்ளோரைத் தம் கல்வியின் மாட்சியைக் காட்டி, எடுத்துக்கொண்ட பொருளை ஒழுங்காகப் பேசிப், பல நயங்கள் கூறி, மகிழ்விக்கவேண்டும். கல்விச் சிறப்பை மாத்திரம் காட்டினுல் போதாது; நகைச்சுவையும் 'மிளிரவேண்டும். தாம் சொல்லும் பொருள்களை மக்கள் நன்கு அறியும்படி எளிய இனிய நடையில் தெளிவாகப் பேசவும்வேண்டும். பொருத்தமற்ற மேற்கோள்களையும், பொருள்களையும் சொல்லுதல்கூடாது. நீண்டநேரம் பேச வேண்டும் என்ற ஆர்வமும்கூடாது. பேச எடுத்துக் கொண்ட பொருளைச் சுருங்கிய நேரத்தில், சுவைபடப் பொருத்தமாகப் பேசுகின்ற வழக்கம் எல்லோருக்கும் வாய்ப்பதரிது. மேல்நாட்டார் கூட்டங்களில் அறிவாளி கள் பேசுகையில், மக்களுக்கு மனவெறுப்பும், கசப்பும் தோன்ரு. இன்னும் பேசுவாரா என்றுதான் எண்ணுவர். எப்போது முடிப்பாரோ என்று ஏங்கமாட்டார். ஒரு அரிய சொற்பொழிவை ஒரு புலவர் செய்தால், அதை அப்புலவர் பின்னர் நூல்வடிவாகவும் வெளிப்படுத்தி, அதை மக்களுக்குப் பயன்படுத்துவர்; தாமும் பயன் பெறுவர். அப்படி யானுல், அவர் சொற்பொழிவில் எத்துணைச் சிறந்த பொருள்களும், ஆராய்ச்சி நுணுக்கங் களும் செறிந்துகிடக்கும் என்று நாம் சொல்லவேண்டிய தில்லை. ஏதோ அரசியல் சம்பந்தமாகக் கூடும் கூட்டங் களில்தான் பலதிறப்பட்ட பேச்சுகள் நிகழும். கல்வித் துறையில் நிகழ்கின்ற சொற்பொழிவுகள், பொருள்

சிறைந்து பொலிந்திருக்கும். அத்தகைய சொற்பொழிவு கள் ஆற்றுகின்றவர்கள் நம் தமிழ்நாட்டில் மிகவும் அருமையே; காலவரையறையைக் கவனித்துப் பேசுபவரும், கூட்டங்களை ஒழுங்காக நடத்துபவரும் மிகச்சிலரே.

நம் ஐயர் அவர்கள் மேற்கூறிய குற்றங்களுக்கு ஆளாகாதவர். அவர் சொற்பொழிவு எளிய இன்பத் தமிழ்ப் பொழிவே. பல அரும் பொருள்களும் இருக்கும்; நயங் களும் இருக்கும்; நகைச்சுவையும் இருக்கும். மிக எளிய இனிய தெள்ளிய நடையில்தான் எப்பொருளைப்பற்றியும் பேசுவார். தாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்ற மேற்கோள்களையும், உவமைகளையும் கூறுவார்; சுருங்கிய நேரத்திலேதான் சொற்பொழிவை முடிப்பார். அளவிட்ட நேரத்தை மீறமாட்டார். அவர் பேசிய பொருள் ஒவ் வொன்றும் பின்னர் நூலில் சிறப்புடன் வெளிவரும். அவர் எவ்வாறான சொற்பொழிவை எவ்விடத்தில் புரிந்தா லும், அதை அப்படியே பின்னர் புத்தகமாக்கிவிடுவார். எனவே, அவர் ஒரு சொற்பொழிவு ஆற்ற முன்னதாக எவ்வளவு முயற்சிகள் செய்திருப்பார் என்று சொல்லவும் வேண்டுமோ? இஃதோர் நன்முறையாகும்.

அரும்பாடுபட்டு ஆற்றும் சொற்பொழிவுகளை நம் புலவர்கள் பின்னர் நூல்வடிவில் கொண்டுவரும் வழக் கத்தை மேல்நாட்டாரைப் போலவும், நம் ஐயரைப் போல வும் கொண்டுவரவேண்டும். அவர் பல சொற்பொழிவுகள் பல இடங்களில் செய்திருக்கின்றனர். சென்னைப் பல்கலைக் கழகத்தார் வேண்டுகோளுக்கு இணங்கி, "சங்கத் தமிழும், பிற்காலத் தமிழும்". என்னும் பொருள்பற்றி ஓர் அரிய சொற்பொழிவு செய்துள்ளார். அஃதோர் அழகிய நூலாக வெளிவந்துளது. திருவள்ளுவர் விழா ஒன்று நடை

பெற்றபோது, அங்கு ஓர் அரிய சொற்பொழிவு ஆற்றினார். அச் சொற்பொழிவில் பல ஆராய்ச்சி நுணுக்கங்கள் பொலிந்திருக்கின்றன. அதுவும் ஒரு சிறு நூலாக வெளி வந்திருக்கின்றது. வேறோரிடத்தில், "இசை இன்பம்" என்ற பொருள்பற்றி ஓர் அருமையான சொற்பொழிவு செய்தார். அதில் பல நயங்களை எத்தகைய மக்கள் உள்ளத்தையும் கவரும்படி காட்டியுள்ளார். அது மாணவர்களுக்கும், தமிழன்பர்களுக்கும் சிறந்த இனிய அமுது என்பதில் துளியும் ஐயமில்லை. அச் சொற்பொழிவும் பின்னர் அருமை நூலாக வெளிவந்துவிட்டது.

அவைத்தலைமை :

நம் ஐயர் அவர்கள் பற்பல அவைகளில் கலந்து தலைமை பூண்டு, தமிழில் பொன்னுரைகள் வழங்கியுள்ளார். பற்பல விழாக்களிலும் தலைவராக அமர்ந்து அவைகளை இனிது நிறைவேற்றியுள்ளார். கரந்தைத் தமிழ்ச் சங்க ஆண்டுவிழாக்களில் சில தடவைகளில் தலைவராக இருந்து, பொருள் நிறைந்த இன்மொழிகள், ஆராய்ச்சியின் நலம் மிளிரக் கூறியிருக்கின்றார். சிவபுரி சன்மார்க்க சபையின் ஆண்டு விழாக்களிலும் தலைமை தாங்கியுள்ளார்.

ஐயர் தலைமைபூண்ட அவைகளில் சொற்பொழிவாளர்களை மிகவும் பாராட்டிப் பேசுவார். குற்றங்குறைகளைக் கூறாமல், குணங்களைமட்டுந்தான் சொற்பொழிவுகளில் எடுத்துக் காட்டுவார். பேச்சாளர்களை ஊக்கப்படுத்துவாரேயன்றி, அவர்கள் மனம் புண்பட, ஒருமொழியும் சொல்லமாட்டார். அவர்களைப்பற்றி அவர் சொல்லுபவை எல்லாம் இனிய பணிமொழிகளாகவே திகழும். ஒவ்வொரு பேச்சாளரையும் தமக்குரிய விழுமிய நண்ப

ராகச் செய்துகொள்வார். நன்ருகப் பேசியவர்களை மிக வும் புகழ்ந்து பேசுவார். தமது தலைமை உரையில், அவர் எவ்வித குலவேற்றுமையும், மதவேற்றுமையும், பிறவேற் றுமையும் ஓர் அணுவளவும் காட்டமாட்டார். மனமார வாயாரப் பேச்சாளர்களைப் புகழும் பெருந்தகை நம் ஐயர்

ஒரு சமயம் பச்சையப்பன் கல்லூரியில் ஒரு கூட்டம் நிகழ்ந்தது. அப்போது பல புலவர்கள் பல பொருள் களைப்பற்றிப் பேசினர்கள். நம் ஐயர் அக் கூட்டத்தில் தலைமை வகித்தார். இந் நூலாசிரியரும் அக் கூட்டத்தில் "திருவாசகம்" என்னும் பொருள்பற்றிப் பேசினர். எல்லாப் புலவர்களின் சொற்பொழிவுகளும் முடிந்தபின்னர், எல் லாப் புலவர்களும் ஐயருடன் மேடையில் அமர்ந்திருந் தனர். கூட்டம் கலைந்துவிட்டது. அப்போது ஐயர் தம்முடன் இருந்த புலவர்களை நோக்கி,இந் நூலாசிரியரைக் காட்டி, "இவர் யார் என்று எனக்குத் தெரியவில்லை. நயம்படவும் பேசுகிருர்; வன்மையாகவும் பேசுகிருர்; சுவையும், நகையும் கலந்திருக்கின்றன. இவரைப்போல் அருமையாகப் பேசுபவர் ஒருவரை நான் சில கூட்டங்களில் கண்டிருக்கின்றேன். இவரை நான் அறிந்துகொள்ள வேண் டும்," என்று நயமாகப் புன்முறுவலுடன் கேட்டார். அங் கிருந்த புலவர்கள் தாமும் புன்னகை காட்டி, "இவர் தெரியாதா தங்களுக்கு? இவர்தான் நம் மணி. திருநாவுக் கரசு முதலியாரின் இளவல்," என்று கூறினர்கள். ஐயர் அதைக் கேட்டதும், மிகுந்த களிப்புடன் எல்லோரையும் நோக்கி, "அப்படிச் சொல்லுங்கள்; அதுதான் சரி; பேச் சில் வல்லவராகிய திருநாவுக்கரசின் தம்பியா இவர்? இவரும் அவரைப்போலவே பேசுகின்ருர்; உருவமும் அவரைப்போலவே இருக்கின்றது; இவர் நெடுங்காலம் வாழவேண்டும்," என்று கூறினர்.

## ௬௰. ஒப்பில்லாத் தமிழ்த் தொண்டு

உலகில் மக்களாகப் பிறந்தவர்கள் பலதிறப்பட்ட தொண்டுகள் புரிகின்றனர். பிறமக்களுக்கு நன்மை புரியாத ஒருவர் உலகில் பிறந்தும், பிறவாதவரே ஆவார். பொதுமக்கள் நன்மைக்காக உழைக்கின்ற உண்மையாளர்கள், ஒருபோதும் எத்தகைய இன்னலையும் அடைய மாட்டார்கள். தந்நலம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, பணம் ஈட்டுபவர்கள், பல துயர்கள் அடைதல் திண்ணம். அவர்கள் மனத்தில் ஒருபோதும் களிப்பு நிலவாது. மன அமைதியும் இராது. ஒவ்வொரு ஆண் மகனும், பெண்மணியும் தங்கள் நலத்தைக் கருதுவதோடன்றிப் பிறமக்கள் நலத்தையும் கருதித் தம்மால் இயன்ற உதவியைத் தக்க வேளையில் பிறர்க்குப் புரிந்தே தீர வேண்டும் என்று எண்ணினால் அத்தகைய மக்களின் நலத்தைத்தான் ஆண்டவனும் கருதுகின்றான்.

தொண்டுகளில், நாட்டுத் தொண்டு, மதத்தொண்டு, குலத்தொண்டு, மொழித்தொண்டு என்று பலவகை உண்டு. ஏழைமக்களுக்கு அன்னம் அளித்தல், கல்வி கற்பித்தல் முதலிய பல்வேறு தொண்டுகளும் உண்டு. அத்தகைய தொண்டுகள் செய்பவர்களுக்குப் புகழும் உண்டு; களிப்பும் உண்டு; மன அமைதியும் உண்டு; அவர்கள் முகங்களில்தான் மலர்ச்சியும் உண்டு.

இத்தகைய தொண்டுகள் எல்லாவற்றிலும் தாய் மொழித் தொண்டே சாலச் சிறந்த தொண்டு என்று கூறலாம். இத்தொண்டு சிறந்த புலமை பெற்ற பேரறிஞர்களுக்கே உரிமை உடைத்தாகும். பழுத்த புலமை பெற்ற பல புலவர்கள் படித்தபடியே காலத்தைக் கழிப்பர். சில புலவர்கள் பற்பல சொற்பொழிவுகள் செய்து, மாணவர்

களுக்குப் பல நூல்கள் பாடம் கற்பித்துக் காலத்தைக் கழிப்பர். வேறு சில புலவர்கள் தாமாகவே நூல்கள் எழுதித் தாய்மொழிக்குத் தொண்டு செய்வர். தொண்டு கள் எல்லாம் சிறந்தனவே எனினும், பெருந் துன்பத்தைக் கொடுக்கும் தொண்டு, பனைஏடுகளிலிருந்து, பல பொருள் களையும் பிழையின்றித் தொகுத்து எடுத்துத் தெளிவாக ஆராய்ந்து, அவைகளைப் புத்தகங்களாக மிளிரச் செய்வது தான் என்று உறுதியாகச் சொல்லலாம். மேலும், உடல்நலத்தையும் கருதாமல், பெரு மதிப்பையும் பாராட் டாமல், ஊர் ஊராகத் திரிந்து, நகர் நகராக நடந்து, இரயி லிலும், வண்டியிலும், கால்நடையிலும் சென்று, ஓலை ஏடு களைக் கண்டுபிடித்துப் பிறமக்களிடத்தில் அவைகளைக் கெஞ்சிக் கேட்டு, வீட்டிற்குக் கொண்டுவந்து, இரவும் பகலும் ஓயாமல் உழைத்து, ஓலையில் உள்ளவைகளைக் காகி தங்களில் எழுதி, மக்கிக்கிடந்த எழுத்துக்களுக்கு உயிர் தந்து, அழகிய தமிழ் நூல்களாக உருவாக்கும் தொண் டைக் காட்டிலும், தாய்மொழிக்குச் செய்யும் தொண்டு வேறு உண்டோ? இத் தொண்டைத்தான், தமிழ் வளர்ச் சிக்காகப் பிறதொண்டுகளும் புரிந்த நம் ஐயர் அவர்கள் தலைமைத் தொண்டாகப் பூண்டு, நம் தமிழ் மக்களுக்கு பழைய நூல்களை அழியாச்செல்வங்களாகத் தந்துள்ளனர்.

அத்தகைய அருமைபெருமை மிக்க நூல்களே சிந்தாமணி, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், புறநானூறு, மணி மேகலை, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்பனவாகும். இத் தனை நூல்களையும் நம் ஐயரவர்கள் தென்னாடு முழுவதும் சுற்றிப் பல வள்ளல்கள், புலவர்கள், அறிஞர்கள் ஆகிய வர்கள் உதவியைக் கொண்டு, தாமே பதிப்பித்து, அரும்பதஉரைகளும் சேர்த்து, நம் தமிழர்களுக்கு உதவினர்.

ஐயர் அவர்கள் மேற்கூறிய தமிழ்நூல்களைப் பதிப்பிக்கையில், மற்றொரு அருந் தொண்டு ஆற்றியிருக்கின்றார். அஃதாவது, பாக்கள் வடிவில் கடினமான முறையில் எழுதப்பட்டிருந்த அருமையான பொருள்களை எல்லாம், எல்லோரும் அறியும் வண்ணம், எளிய தமிழ் உரைநடையில் எழுதி வெளியிட்டிருக்கின்றார். அவை சிலப்பதிகாரக் கதைச் சுருக்கம், மணிமேகலைக் கதைச் சுருக்கம், உதயணன் கதைச் சுருக்கம், பத்துப்பாட்டு உரைநடை முதலியவைகளாம்.

பனை ஏடுகளிலிருந்த பழைய நூல்களை, அழகிய வடிவங்களாகக்கொண்டுவந்த நம் ஐயர், தமிழ்உரைநடையையும் வளர்ப்பிக்கத் தாமே சில புதிய நூல்கள் எளிய நடையில், பல பொருள்கள் பொலிந்து திகழ எழுதியுள்ளார். அவைகளில் மேற்கூறியபடி ஆங்காங்கு அவ்வப்போது ஐயர் ஆற்றிய சொற்பொழிவுகளும் உள்ளன. இன்னும் அவர் தம் வாழ்க்கையில் நேரில் கண்ட நிகழ்ச்சிகளையும், பிறர் கூறக்கேட்ட நிகழ்ச்சிகளையும், சிறு சிறு நூல்களாக உரைநடையில் எழுதியுள்ளார். அவை **"பழையதும் புதியதும்," "நான் கண்டதும் கேட்டதும்," "நல்லுரைக்கோவை,"** என்பனவாம். சில பெரியோர்கள் வரலாறுகளையும், சிறு நூல்களாக அழகுற எழுதியுள்ளார். அவை, **"கோபாலகிருஷ்ண பாரதியார்," "கிருஷ்ணய்யர்," "மஹா வைத்திய நாதய்யர்"** ஆகியவைகளாம்.

கலைமகள் என்னும் மாத இதழில் அது தோன்றிய நாளிலிருந்து, பல சிறந்த கட்டுரைகள் எழுதியிருக்கின்றார். **ஆனந்தவிகடன்** என்னும் வாரஇதழிலும் அவர் தம் வரலாற்றை இவ்வுலகில் உயிர்வாழ்ந்த வரையில் எழுதியுள்ளார்.

## ௧0. நன்றி மறவாப் பெருந்தகையாளர்

ஒருவன் எத்துணைச் சிறந்த கல்விமானாக இருப்பினும், அவன்மாட்டு நற்குணம் ஒளிரவில்லை எனின், அவன் சிறந்தவன் ஆகான். மக்களுக்குக் கண் என்று சொல்லப்படும் கல்வியினும் விழுமியது நற்குணம். பெரும் பதவிகளில் இருப்பவர்களும், பெருஞ் செல்வத்தில் திளைப்பவர்களும், பெரும்புகழ் பெற்றுத் திகழ்பவர்களும், குணமாட்சி என்னும் அணிகலனைப் பூண்டிராவிட்டால் அவர்கள் உயர்ந்த பதவிகளுக்கும், சிறந்த செல்வத்திற்கும், பரந்த புகழுக்கும் பண்பில்லை. அத்தகைய மக்களுக்கும் உண்மையில் மாண்பில்லை. இவ்வுலகில் ஒருவர்க்கு எப்பொருள் இல்லையெனினும் இழுக்கில்லை. மாண்புமிக்க கல்வி இல்லையெனினும்கூட இழிவில்லை. ஆனால், குணமாட்சி மாத்திரம் இல்லையெனின், அது இழுக்கும் ஆகும்; கேடுமாகும். இக்காரணம் பற்றியேதான் இவ்வுலகில் தற்போது களிநடனம் புரிகின்ற ஊழல், கைக்கூலி, பேராசை முதலிய தீய குணங்களுக்கு அடிமையாக இருக்கும் பல பேரறிஞர்களும், உயர்ந்த அலுவலாளர்களும், பெரிய செல்வந்தர்களும், வியாபாரிகளும், தங்கள் மதிப்பையும், பெருமையையும் இழந்து, மானக்கேட்டிற்குள்ளாகி, மாண்பில்லாச் சிறைச்சாலைத் தண்டனையையும் பெறுகின்றனர்.

நற்குணங்கள் பலவற்றினுஞ் சாலச் சிறந்தது நன்றி மறவா அருங்குணமேயாகும். நன்றியில்லா மக்களை நாடெங்கும் பழிப்பர்.

நம் வள்ளுவர் "நன்றி மறப்பது நன்றன்று" என்னும் பொன்மொழியால் இவ்வுலகில் பிறந்த எந்த ஆடவனும், எந்தமாதும் ஒருவர் செய்த நன்றியை மறத்தல் கூடாது

என்று பெருந்தன்மையாக, உயர்ந்த நிலையில் கூறினர். அதுவுமல்லாமல், ஒருவர் செய்த நன்றியின் பெருமை இத்தன்மையது என்று வரையறுக்க முடியாது என்று பொருள்படவும், ஆனல் அதை அளவிட ஒருவர் செய்த நன்றியை எந்த அளவில் அந்நன்றி பெற்றவன் அதன் பெருமையை அறிகின்ற குணமாட்சிபெற்று இருக்கின்ருனே, அந்த அளவில் அந்நன்றியின் அளவை அறியலாம் என்றும் மிகவும் ஆழமான பொருளை வைத்து,

> "உதவி வரைத்தன் றுதவி, உதவி
> செயப்பட்டார் சால்பின் வரைத்து"

என்று அருமையாக உலகுக்கு அறிவாகிய ஒளியை அளிக்கின்ருர் நம் வள்ளுவர். எனவே, நன்றியைப் பெற்றுக் கொண்ட எத்தகைய ஆண்மகனும், பெண்மணியும் எத்துணை அளவிற்கு அந்நன்றியைப் பாராட்ட வேண்டும் என்றும், அந்நன்றிக்கு மறுநன்றி எப்போது புரியலாம் என்று ஆவலுடன் ஒவ்வொருவரும் எதிர் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும், நம் திருவள்ளுவர் விரும்புகின்ருர் என்றும் சொல்லலாம்.

நம் ஐயர் அவர்கள் ஒழுக்கம், வாய்மை, தூய்மை, உண்மை, பணிவு முதலிய பெருங் குணங்கள் பெற்றவர் என்று பல வழிகளில் முன்னமே கூறியிருக்கின்ருேம். அத்தகைய குணங்கள் எல்லாவற்றையும் மிகச் சிறப்பாக ஒளிபெறச் செய்யும் குணம் நன்றிமறவாப் பெருங் குணந் தான் என்றும் கூறலாம். மிகவும் நல்லவர்கள் என்று கருதப்பட்டவர்களிடத்திலும் காணப்படாத அளவில் நன்றிமறவாப் பெருங் குணத்தைச் செவ்வனம் பெற்றவர் நம் ஐயர். அவர், தம்மைப் பெற்ற தாய் தந்தையர்க்கும், தமக்குத் தமிழறிவை ஊட்டிய ஆசிரியர்களுக்கும், தக்க

சமயத்தில், தகுந்த உதவிகள் செய்த நண்பர்களுக்கும், ஏனைய நல்லோர்களுக்கும் தமது நன்றியை மறவாமல், தம்மால் இயன்றவரையில், அவர்களுக்குத் தாமும் நன்றி ஆற்றி இருக்கின்றார்.

**தந்தைக்கு நன்றி :**

முதலாவதாக, தம் தாய் தந்தையர் மனங்கோணாமல், அவர்களின் விருப்பின்படியே நடந்து கொண்டார். அவர் தந்தை கும்பகோணத்தில் இருந்தவரையில், தம் மைந்தருக்குச் சென்னையிலுள்ள மாகாணக் கல்லூரியில் பெரிய தமிழாசிரியர் பதவி வந்தபோதும், அவர் கும்பகோணத்தை விடக்கூடாது என்று கூறினார். தந்தை சொல்லுக்கு மறுசொற் சொல்லாத நம் ஐயர், சென்னையில் பெரும் பதவியைப்பெற, பெருவிருப்பம் கொண்டிருந்த போதிலும், அப்பதவியைப் பொருட்படுத்தாமல், தம் தந்தையின் சொல்லையே பொருட்படுத்தி, அவர் இவ்வுலகில் இருந்தவரையில், கும்பகோணத்தை விட்டுப் பிரியவில்லை. பின்னர் தான் பூண்டி அரங்கநாத முதலியார் எம். ஏ. அவர்கள் சொல்லை மதித்துச் சென்னை மாகாணக் கல்லூரிக்கு ஆசிரியராக இருக்க இசைந்தார்.

**ஆசிரியருக்கு நன்றி :**

தம் ஆசிரியராகிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம், நம் ஐயர் காட்டிய நன்றியை ஏட்டில் காட்டமுடியாது. எப்போதும் தம் ஆசிரியர் பெயர் எக்காரணத்தைக்கொண்டு அவருக்கு நினைவு வந்தாலும், அவர் தமக்குச்செய்த நன்றியை உள்ளம் உருக நினைந்து, கண்ணீர் உகுப்பார். அவர் திருப்பெயரையும் தமது வாயால் சொல்லுவது தகுதியல்லவென்று, அவரைப் பற்றிச் சொல்ல நேர்ந்தபோதெல்லாம், நம் ஐயர் தம் ஆசிரியர்

முழுப்பெயரை வெளிப்படையாய்க் குறிக்காமல், "பிள்ளையவர்கள்" என்றுதான் குறிப்பிடுவார்; குறிப்பிடும்போதெல்லாம் தம் ஆசிரியரின் அருமையை நினைந்து, மனம் உருகுவார். மேற்கூறிய பிள்ளையவர்களின் வரலாற்றை இரண்டு பாகங்களாக எழுதியுள்ளார்.

தம் ஆசிரியரின் இல்லக்கிழத்தியாராகிய, 'காவேரியாச்சி' என்னும் அம்மையாருக்கு, அவர் உயிருள்ளவரையில் மாதந்தோறும் தவறாமல் ஐந்து ரூபா அனுப்பிவந்தார். இன்னும் பல்வேறு சமயங்களில் பற்பலவகைகளில் அவ்வம்மையாருக்கு உதவி செய்திருக்கின்றார். பின்னர் பிள்ளையவர்களின் குடும்பம், பண்டைய பல புலவர்கள் குடும்பம்போல், அல்லலாகிய வறுமைக்கு அடிமைப்பட்டுத் துன்புற்றபோது, தாம் ஒரு பட்டியல் தயாரித்து, அதில் தாம் நூறு ரூபாய் கையொப்பமிட்டுப் பல செல்வர்களிடத்திலும், நண்பர்களிடத்திலுமாக இரண்டாயிரம் ரூபாய் சேர்த்துப் பிள்ளையவர்களின் புதல்வராகிய, சிதம்பரம்பிள்ளை என்பவரிடம் அளித்தார். அக்காலத்தில் இரண்டாயிரம் ரூபாய் என்றால், இக்கால நிலைமைக்குப் பத்தாயிர ரூபாய்க்கும் மேற்பட்ட தொகை என்று சொல்லலாம். இதுவன்றோ நன்றிமறவாமையின் அழகு? பின்னர் ஒருபோது பிள்ளையவர்களின் பேரரான மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்பவரைத் தமது 81-ஆம் ஆண்டுப் பிறப்புவிழா நடைபெற்றபோது, சென்னைக்கு வரவழைத்துத் தகுந்த அன்பும், நல்லுரையும் காட்டிப் பல நலங்கள் புரிந்து, அவரை மகிழ்வித்தார்.

சேட்டியாரவர்கட்கு நன்றி:

கும்பகோணத்தில் முதன்முதலாக, அங்கிருந்த கல்லூரியில் தமிழாசிரியர் வேலை பார்க்க, தமக்காகப் பெரு

முயற்சிசெய்தவர், **தியாகராச செட்டியார்** என்று முன்னமே கூறியிருக்கின்றோம். தம் இல்லற வாழ்க்கையில், தமது குடும்பத்திற்காக முதன்முதல் பொருள் வருவாயைத் தேடிக்கொடுத்த, மேற்கூறிய செட்டியாரின் நன்றியையும் நம் ஐயர் மறக்கவே யில்லை. சென்னை, திருவட்டீஸ்வரன்பேட்டையில், தாம் தமக்காக வாங்கிய திருமனைக்குத் "**தியாகராச விலாஸ்**" என்று தக்க சமயத்தில் தமக்கு நன்றிபுரிந்த செட்டியார் பெயரை நினைந்து களிப்புறச் சூட்டினார். நாள்தோறும் செட்டியாரைப் பற்றித் தமக்குத் தெரிந்தவரையில், "**தியாகராசச் செட்டியார்**" என்னும் பெயருடைய நூலையும் எழுதி நன்றி பாராட்டினார். அந்நூல் பி. ஏ. வகுப்பிற்குப் பாடமாகவும் வைக்கப்பட்டிருந்தது. செட்டியார் பெயரையும் ஐயர் சொல்வதில்லை. அவரைக் குறிப்பிடும்போதெல்லாம், தம் குருமூர்த்தியைப் '**பிள்ளையவர்கள்**' என்று சொல்லிவந்தது போல், தியாகராசச் செட்டியாரையும், '**செட்டியாரவர்கள்**' என்றுதான் கூறுவார்.

ஆசிரியர் மனைவிக்கு நன்றி :

நம் ஐயரின் வேறொரு ஆசிரியரான, **சடகோப ஐயங்கார்** என்பவரிடத்திலும் நன்றியை இனிது காட்டினார் நம் ஐயர். அவ்வாசிரியரின் மனைவியான, **செங்கமலத்து அம்மைக்கும்** வேண்டும்போதெல்லாம், பற்பல உதவிகள் புரிந்துவந்தார்; அஃதோடு, அவ்வம்மையாரைத் தாமே ஆதரித்தும் வந்தார்.

பிற மக்களுக்கு நன்றி :

தாம் பனைஏடுகளிலிருந்து அழகிய தமிழ்நூல்களாகத் தமிழுலகில் வெளிவர ஏடுகள் உதவிய பல நண்பர்களையும், பதிப்பிக்கப் பொருள் உதவிய பல வள்ளல்களை

யும், அண்ணல்களையும் உள்ளத்தில் பாராட்டியபடியே இருந்தார். அச்சிடுகையில் தமக்குச் சிறு உதவிபுரிந்த நண்பர்கட்கும், மாணவர்கட்கும், பற்பல திருத்தங்கள் செய்துகொடுத்த அரும்புலவர்கட்கும், தம்மை மதித்துச் சிறப்புகள்செய்து பட்டங்களும், பரிசுகளும் அளித்த கல்லூரிகட்கும், பொதுமக்கட்கும், இறுதியாகத் தம்மைத் தமிழுலகில் தக்கோராகவும், மிக்கோராகவும் செய்வித்த நம் தமிழன்னைக்கும் நம் ஐயர் அவர்கள், இவ்வுலகில் இருந்தவரையில், நன்றிபாராட்டி, உள்ளம் கசிந்து, களிப் புற்றவராகவே இருந்தார். ஐயரவர்களின் செய்ந்நன்றி மறவாச் சிறப்பினை என்னென்பது?

---

## கக. உழைப்பின் பயன்

பட்டமும், பரிசும் :

ஐயர் அவர்கள் தம் உழைப்பால் பெருமாண்பு மட்டும் பெற்றவரல்லர்; பெரும் பட்டங்களும் பெற்றூர்; பரிசுகளும் பெற்றூர். நன்றி அறிதல் என்னும் நற்குணத்தைப் பெற்ற நம் தமிழ் மக்கள், ஐயரின் உழைப்பிற்குரிய மதிப்பையும் அளித்தனர்; புகழையும் பரப்பினர்; மாபெரும் பட்டங்களும், பணப் பரிசுகளும் தந்தனர். ஐயர் அவர்களின் எத்தகைய சிறு உழைப்பும் பெரும்பயனையே பெற்றது என்று கூறலாம்.

முதலாவதாக, ஐயரின் தமிழ்த்தொண்டை நம் அரசாங்கத்தாரே பெரிதும் பாராட்டி, 1905-ஆம் ஆண்டில், **ஆயிரம் ரூபாய்** பரிசு அளித்து, 1906-ஆம் ஆண்டில், **மஹாமஹோபாத்தியாயர்** என்ற மாபெரும் பட்டத்தையும் வழங்கினர். இப்பட்டத்தை நம் ஐயர் அடைந்தது அவருக்குத் தனிச்சிறப்பை உண்டாக்கி, அவர் பெயரை நாடெங்கும் பரிமளிக்கச்செய்தது.

1925-ஆம் ஆண்டில், காஞ்சிமாநகரில் பெரும்புகழ் பெற்று, எல்லோராலும் போற்றப்பட்ட காமகோடிபீடத் தலைவராகிய, **சங்கராச்சாரியாரவர்களும்**, ஐயர் அவர்களின் அரும்பெரும் தமிழ்ப் புலமையைக்கண்டு அகமகிழ்ந்து, '**தாக்ஷிணுத்ய கலாநிதி**' என்ற பட்டத்தைத் தந்தனர். அவ்வாண்டிலேயே மதுரைமாநகரில் நடைபெற்ற தமிழ்ச் சங்க அதிகாரிகளால், ஐயர் அவர்களின் தமிழ்த்தொண்டுக்குத் தகுந்த பரிசாக ஐந்துஆயிரம் ரூபாய் அளித்தனர். இயற்கையாகப் புலவர்கட்குப் பல பட்டங்கள் பெறுவது எளிதாக இருந்தாலும் இருக்கலாம். ஆனல், புலவர்களின் அரியபுலமையை அறிவிக்கப் பணத்தை பரிசாகக் கொடுக்

கும் மக்களும் அரியர், சங்கங்களும் அரியன. சங்கங்கள் தமக்கே பொருள் வருவாயைத் தேடியவண்ணமாகவிருப்பது இயல்பு. அப்படியிருக்க, அச்சங்கத்தாரே மனம் உவந்து, ஐயருக்கு ஐயாயிரம் ரூபாய் அக்காலத்தில் தமிழ்த்தொண்டுக்காகப் பரிசளித்தனர் என்றால், அதனினும் மேலான புகழ் ஐயருக்கு வேறு உளதோ?

1932-ஆம் ஆண்டில், சென்னைப் பல்கலைக் கழகத்தார், ஐயரவர்களின் அரும்பெரும் புலமையை வியந்து, மகிழ்ந்து, அவருக்குத் தமிழ் இலக்கிய அறிஞர் என்று பொருள்படும், **டாக்டர்** என்னும் பெரிய பட்டத்தைத் தந்தனர். இவ்வாறு ஐயருக்குப் பட்டங்கள் குவிந்த வண்ணமாக இருந்தன.

---

# கஉ. மாபெருஞ் சிறப்பு

1935-ஆம் ஆண்டில் ஐயரவர்களுக்கு உயர்வான சிறப்பு அளிக்கப்பட்டது. அப்போது அவருக்கு 81-ஆம் ஆண்டு பிறந்தது. அவர் இவ்வுலகில் எண்பது ஆண்டுகள் தலை சிறந்த, மதிப்பு மிகுந்த, இன்பம் நிறைந்த, நல் வாழ்வு வாழ்ந்தார். இத்தகைய நீண்ட ஆயுளையும், உடல்நலத்தையும் செம்மையுறப்பெற்று, உலகில் வாழ்பவர் மிகச் சிலரே. ஐயரவர்கள் இத்தகைய வாழ்வு வாழ்ந்து, தமிழ்மொழிக்குத் தனித்தொண்டு ஆற்றியதால், தமிழ் மக்கள் தங்கள் நன்றிக்கு அறிகுறியாக, அவர் எண்பத் தோராம் ஆண்டுவிழாவை நிகழ்த்த நினைத்தனர். அப் போது சென்னைப் பல்கலைக்கழகக் கட்டிடத்தில் பெரும் புலவர்களும், பேரறிஞர்களும், பெரும்பதவியிலுள்ளவர் களும், தமிழ்மாணவர்களும், மற்றவர்களும் ஐயரவர் களின் விழாவை மிகச் சிறப்பாக நிகழ்த்தினார்கள். அச் சமயம், சென்னை, ஆக்டிங் கவர்னர் பதவியிலிருந்த, டாக்டர், சர். ஊஸ்மான் சாயபு அவர்கள் தலைமை வகித்தார். சென்னை அரசாங்கத்தில் அமைச்சராகத் திகழ்ந்த, சர். பி. டி. இராஜன் அவர்கள், பொதுமக்கள் சார்பாக, மூவாயிரம் ரூபாய் அடங்கிய பணப்பையை ஐயருக்கு வழங்கி, அவர் சிறப்பையும், தமிழ்மதிப்பையும் சிற்சில மொழிகளால் எல்லோரும் இன்புறப்பேசி, அவரைப் பாராட்டினார். பின்னர்ப் பல அறிஞர்கள் ஐயரவர்களின் அருமைத் தமிழ்த்தொண்டைப் பற்றியும், உழைப்பின் மாண்பைப்பற்றியும், செழும் புலமையைப்பற்றியும், பற்பல வாறு புகழ்ந்து பேசினார்கள்.

ஐயரவர்கள் அங்குக் கூடிய பொதுமக்களுக்கும், பெருமக்களுக்கும், தம் மனமார்ந்த நன்றியைக் கூறித்

தமக்கு அவர்கள் காட்டிய மதிப்பு அளவிடற்கரியது என்றும், அதற்குத் தம் உழைப்பே காரணம் என்றும், அத்தகைய உழைப்பை எல்லோரும் அருமைக்கலனாக அணியவேண்டுமென்றும் கூறினார். மேலும், தம் உள்ளம் மகிழ்ச்சிக் கடலில் அப்போது திளைக்கின்றது என்றும், மீண்டும் இளமை தமக்குத் தோன்றியதுபோல் மன வெழுச்சி தோன்றிற்று என்றும், மேலும்மேலும் தமிழ்த் தொண்டு செய்ய நான் விரும்புகின்றேன் என்றும் கூறினார். இத்தகைய பேரும், புகழும் எவர்க்குக் கிடைக்கும்?

## வாழ்த்துப் பாக்கள்

[பாசா கவிசேகர மகாவித்துவான். ரா. இராகவையங்காரவர்கள் பாடியவை]

மேலும் நம் ஐயரவர்களின் நிறைவாழ்நாள் பேற்றிற்குத் தனிப்பெருங் காரணம் 'ஞாலமளந்த மேன்மைத் தமிழ்த்தாயின்' நூலணிசாத்தும் மேலாந் திருத்தொண்டாகும். நிறைநாள் நூற்றிருபதாண்டினை ஆறு கூறிடின் வீட்டின்கூறு அறுபதாண்டு நிறைவாகும். மேலிருபதாண்டு வீட்டின் தொடக்கம்; அத்தகைய எண்பதாண்டு விழாவின் காரணமாகப் பல பெரும்புலவர்கள் சுவை மிக்க பல பாடல்கள் பாடி வாழ்த்தியுள்ளார்கள். 'பூமாலைக்கு ஏதுபுகழ் பொன்மாலைக்கு ஏதுமணம், பாமாலைக்கு உண்டே பயன்' ஆதலால், அவ்வாழ்த்துப் பாடல்களுள் சில இங்குக் காண்க.

1. பத்துப் பாட்டுப் பதிற்றுப்பத் துப்புறப்
   பாட்டொ டைங்குறு நூறுசிந் தாமணி
   புத்தர் கொள்கை புகன்மணி மேகலை
   பொற்சி லப்பதி காரம் பெருங்கதை

மெத்து நன்பரி பாடல் பரணிநூல்
வேம்பத் தூரர் திருவிளை யாடலோ
டித்த ரைக்கிற வாதுசெய் வள்ளன்மைக்
கியாது ளோஞ்சாமி நாதற் குதவற்கே !

2. ஏடு தேடி யலைந்தவூ ரெத்தனை
எழுதி யாய்ந்த குறிப்புரை யெத்தனை
பாடு பட்ட பதத்தெளி வெத்தனை
பன்னெ றிக்கட் பொருட்டுணி வெத்தனை
நாடு மச்சிற் பதிப்பிக்குங் கூலிக்கு
நாளும் விற்றபல் பண்டங்க ளெத்தனை
கூட நோக்கினர்க் காற்றின வெத்தனை
கோதி லாச்சாமி நாதன் றமிழ்க்கென்றே !

3. எத்து ணைப்பயன் னளிப்பர்சிந் தாமணிக்
கேற்ற நல்விலை யென்மணி மேகலைக்
குய்த்த வண்சிலம் பின்செய்திக் கொத்ததொன்
றுண்டு கொல்லிவண் மண்டலந் தேடினும்
வைத்த செய்யுள் விளைந்த பொருண்முற்றும்
மானு மோபத்துப் பாட்டுச்செய் யுட்பொருட்
கித்த ரைப்பதிற் றுப்பத்து நூறுபொன்
இன்ப திற்றுப்பத் துக்கெதிர் நிற்குமோ !

4. பிறந்த துத்தம தானமென் பாரிவன்
பெய்த துத்தம தானமென் பேனிவன்
சிறந்த தாயதெண் ணுயிரர் நன்குடி
தெளிந்த சொற்களெண் ணுயிர மேம்படும்
உறுந்த மிழ்ப்பர மாசாரி யன்னெனற்
கொத்த தேசாமி நாதப் பெரும்பெயர்
மறைந்த செந்தமிழ் தோற்றஞ்செய் வண்மையான்
மற்றிக் காலத் தகத்தியன் றுனிவன்.

5. பொன்ப லாயிர மும்பொரு வாதுநீ
புரிந்த வண்டமிழ்த் தொண்டினுக் கொண்டுகில்
நின்ப லாயிர மான குறிப்புரை
நீடு செய்புகழ்ப் போர்வைக்கு நேருமோ
உன்ப ராவுமெய்ந் நூல்வடி வாகுநீ
ஊழி யூழியும் வாழ்கென வோதுமிவ்
அன்ப லாலெது வுந்தர வாய்ந்திலேன்
ஐய னேசாமி நாதநன் மெய்யனே !

(வேறு)

6. உச்சிமேற் கொளவல்ல நச்சினார்க் கினியர்
உயர்ந்த பரிமேலழக ரடியார்க்கு நல்லார்
மெச்சுமிளங் கோவடிகள் கொங்குவேள் சாத்தன்
வீறுதமிழ்ச் சங்கத்தைந் நூறுபுல வோர்கள்
அச்சயின நூலுதவு திருத்தக்க தேவர்
அம்மயிலை நாதர்புறப் பாட்டினுரை காரர்
நச்சுபதிற் றுப்பத்தி னுரையாளர் கூத்தர்
நவில்சாமி நாதனிசை நாம்புகல்வ தென்னே.

—— —

## கௌ. உலகப்பிரிவும், உலவாப்புகழும்

திருக்கழுக்குன்ற வாழ்க்கை :

நம் ஐயரவர்கள் தமது 81-ஆம் ஆண்டுவிழாவில் அடைந்த புகழைப்பற்றியும், பரிசைப்பற்றியும் மேலே கூறினேம். தற்காலத்தில் மக்கள் ஐம்பது வரையில் உயிர் வாழ்வதே அருமையாக இருக்கின்றது. அதற்குள் அவர்கள் பல பிணிகளும் வரப் பெறுகின்றனர்; இன்னல்களும் எய்துகின்றனர். ஆனல், நம் ஐயர் எண்பது ஆண்டுகள் வரையில், உடல் வன்மையுடனும், மனவன்மையுடனும், புகழ்ச்சியுடனும், மகிழ்ச்சியுடனும் இவ்வுலகில் எவரும் வியக்கத்தக்க நல்வாழ்வு வாழ்ந்தார். உலகவாழ்வில் அவருக்கு இணையான வாழ்வு, மக்களுக்கு வாய்ப்பது அருமையினும் அருமையே. எண்பது ஆண்டுகள் உடல் நலத்துடன் வாழ்ந்து, தமிழ்த்தொண்டு புரிந்து வந்ததே மிகவும் அருமை. மேலும், எட்டு ஆண்டுகள் ஐயரவர்களுக்கு ஆண்டவன் ஆயுள் தந்தான். அவ்வாழ்நாட்களையும், உடல்நலத்தோடும் தமிழ்ப்பணி ஆற்றி, மகிழ்ச்சி பூத்தார். அவர் நல்வாழ்க்கை எல்லா மக்களுக்கும் ஒரு சிறந்த வழிகாட்டி என்று கூறலாம்.

1942-ஆம் ஆண்டு, நம் தமிழ்நாட்டிற்கு ஓர் அச்சந் தரும் ஆண்டாகவே இருந்தது. சென்னைமாநகரம் நாடோறும் பெரிய நெருக்கடியில் தத்தளித்து நின்றது. சப்பானியர்கள் இப்போது வருவரோ, இனிச் சற்றுநேரத்தில் வருவரோ, எப்போது வருவரோ என்று சென்னைநகர் மாந்தர்கள் மனம் நடுங்கிக்கொண்டிருந்தனர். தங்கள் மனைகளுக்கும், பொருள்களுக்கும், மனைவிகளுக்கும், மக்களுக்கும், தங்களுக்கும் மற்றவர்களுக்கும் அழிவுகாலம் வந்துவிடுமோ என்று அலறினர்கள். பணக்காரர்கள் மனம்

தத்தளித்தது. ஏழைகளும் ஏங்கினார்கள். சென்னைநகர் முழுவதும் ஒரு அடவிக் காடுபோல் இருக்கத்துவங்கிற்று. இரவில் ஒளி மயமாக விளங்குகின்ற நகரம், இருள்மயமாகப் புழுங்குகின்ற நரகமாக விளக்குகள் ஒன்றும் இன்றி, நிலை கெட்டுப் பெருமை அழிந்து கிடந்தது. நகரமக்கள் உயிர் தப்பிப் பிழைத்தால் போதும் என்று அழகிய தெய்வத் திரு நகராகிய சென்னைநகரை விட்டு, மனைவி மக்களோடு, மூட்டை முடிச்சுகளோடு, வெளியூர்களுக்கு ஓடலானார்கள். அந்த நாட்களை நாம் என்னென்று சொல்வது ?

இந்த நிலையில் இருந்த நகரில், மக்கள் அஞ்சியபடி திடீரென்று, சென்னைத் துறைமுகத்தில், ஒரு நாள் சப்பானியர் குண்டு ஒன்று ஆகாயவிமானத்திலிருந்து விழுந்தது. மக்கள் அச்சம் மலைபோல் வளர்ந்தது; நகர் முழுவதும் நடுக்கம். எங்கு பார்த்தாலும் "சப்பானியர் வந்துவிட்டனர், வந்துவிட்டனர், வெளியூருக்கு ஓட்டம் பிடியுங்கள், இல்லையேல் உயிரை இழப்போம்," என்ற பேச்சுகள்தான் நடமாடின. எல்லோர் உள்ளத்திலும் அந்நிலையில் அச்சம் பிறந்தது வியப்பல்ல. நம் அரும் பெரும் புலவரான சாமிநாதையர் அவர்களும், மற்றவர் களைப்போலவே சப்பானியர் குண்டுக்கு அஞ்சினார். மற்றவர்கள் கூறியதைக்கொண்டு, ஐயரவர்களும் அருமை நகரைவிட்டு வெளியூருக்குப் புறப்பட்டார். ஆனால், அவர் ஆற்றிய அரிய நல்வினையின் பெரும்பயனாக, அமைதியும் இயற்கைக் காட்சியும், தெய்வப் பொலிவும் திகழும் செங் கற்பட்டுக்கு அருகேயுள்ள, திருக்கழுக்குன்றம் என்னும் சிறந்த திருப்பதிக்குச் சென்றார். தம் தந்தையைப் போல், சைவப்பற்றிலும், சைவ ஒழுக்கத்திலும் சிறந்த நம் சாமிநாதையர், சிவத்தலங்களில் ஒன்றாகத் திகழ்ந்து, மூவர் தேவாரப் பாடல்களையும் பெற்ற, திருக்கழுக்

குன்றத்தைத் தமது இறுதிக் காலத்தில் நண்ணியது வியக்கத்தக்கது.

பெரும் பிரிவு:

தமிழ்ப்பற்றிலும், கடவுள்சிந்தனையிலும், தலைசிறந்து விளங்கிய நம் ஐயர், இவ்வுலக வாழ்வை விட்டுப்பிரியும் காலம் வந்துவிட்டது. நம் பட்டினத்தடிகள் கூறிய,

" முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணு வதுங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே."

என்ற பாடல்தான் நினைவுக்கு வருகின்றது. பழைய தமிழ் நூல்களுக்கே புத்துயிர் தந்த, நம் அருங்குணத் தமிழரசு, நம் சென்னைநகரில் வாழ்ந்திருந்த தமிழ்த்தந்தை, திருக் கழுக்குன்றம் என்னும் தெய்வத்திருப்பதியில் தங்கியிருந்த போது, அவருடைய உடல்நலம் சிறிது சிறிதாகக் குன்றத் துவங்கியது. ஒருநாள் திடீரென இவ்வுலக வாழ்வை ஒல்லையில் நீத்தார். அப்பதி முழுவதும் அவர் பிரிவுச் செய்தி பரவிற்று. மக்கள் அனைவரும் ஒருங்குகூடி, நம் ஐயர் அவர்களைப் புகழ்ந்து, புகழ்ந்து, கண்ணீர் வடித் தனர். சென்னையிலிருந்தும், பிற இடங்களிலிருந்தும் பல அறிஞர்களும் புலவர்களும் நம் ஐயரவர்களின் திருவுடலை முத்தமிட்டுக் கைகூப்பி வணங்கினர்.

ஐயரவர்களின் உடல் இவ்வுலகைவிட்டுப் பிரிந்தாலும், அவர் புகழ்உடல் மாத்திரம் பிரியாமல், இன்றும் இத் தமிழ்நாட்டில் நின்று நிலவுகின்றது. என்றும் நிலவும் தகையது. அவர் தமிழ்மக்களுக்குப் பனைஏடுகளில் மறைந்து கிடந்த கிடைத்தற்கருமையான தமிழ்நூல்களை, அருமை

யான புலவர்களுக்குத் திகழச் செய்த திருத்தொண்டை, இத்தமிழுலகம் என்றும் மறவாது.



ஐயரவர்கள் பல பாடல்கள் பாடியிருக்கின்றார்; பல நூல்களை உரைநடையில் எழுதியிருக்கின்றார். அவைகள் அனைத்தையும் நம் தமிழ் நண்பர்கள் வாங்கிப் படித்தல் நலம். அவருடைய தந்தையார் இறந்தபோது அவர் பாடிய ஒரு பாடலை மாத்திரம் ஈண்டுக் குறிப்பிடுவோம்.

> "பற்றலெங்கே செந்தமிழைப் பற்றிக்கற் றோர்பலர்பால்
> துற்றலெங்கே மீனாட்சி சுந்தரநல் ஆரியன்பாற்
> கற்றலெங்கே கற்றுக் கவலையொரீஇ அங்கிலையே
> நிற்றலெங்கே இன்றுவரை நீயருள்செய் யாவிடிலே."

மேற்கூறிய ஐயர் யாத்த பா ஒன்றைப் படித்துப் பாருங்கள். அது எவ்வளவு எளிதாகப் பாடப்பட்டிருக்கின்றது என்றும், கருத்து எவ்வளவு உயர்ந்து விளங்குகின்றது என்றும் கண்டு மகிழுங்கள்.

ஐயரவர்கள் ஆற்றிய தமிழ்த்தொண்டை மிகப்பெரிதும் பாராட்டி வந்தவர்களில், கவிஞர், தேசிக விநாயகம் பிள்ளை என்பவரும் ஒருவர். அக்கவிஞர், ஐயர் பிரிவை ஆற்ற இயலாது, உள்ளம் உருகிப் பாடிய,

> "சித்திரத்திற் பார்ப்போம் சிலையெழுதிக் கும்பிடுவோம்
> புத்தகத்திற் போற்றிப் புகழ்ந்திடுவோம்—இத்தரையில்
> சந்தப் பொதிகைத் தமிழ்முனிஎன் றுன்னைநிதம்
> சிந்தையிற் கொண்டு தெளிந்து."

என்னும் அருமை வெண்பாவை ஓதி, ஐயரவர்களைப் போற்றிப் புகழ்வோமாக! அவர் தமிழ்த் தொண்டை என்றும் நினைப்போமாக! வாழ்க சாமிநாதையர் திருப்பெயர் என வாழ்த்துவோமாக.

---

